54. தீர்த்தமுந் தேவர் திரளும் பிறவுநனி
கூர்த்த வளமுங் குடிகொண்டு - பார்த்தலையில்

55. ஓங்கிய காஞ்சி யொருநகரா யங்கரிற்
றேங்கிய தீர்த்தத் திரளாகித் - தாங்குமருள்

56. ஏகம்ப நாதரா யென்று மினிதிருந்தும்
பாகம் பலவான பல்லுயிர்க்கும் - மோகம்

57. படைத்தமலந் தீர்ப்பப் பரிந்ததிரு வுள்ளம்
தொடுத்த கருணை துனைய - அடுத்தருளும்

**கச்சியில் அமலன் நச்சிய தலங்கள்**

58. மற்றுமொரு மூன்றுகம்பம் வாலீச நந்தீசம்
வெற்றிமயா னம்விண்டு வேசமெழில் - மத்தள

---

ஐயாயிரம், துர்க்கை வைரவர் ஐயனர் இவர்களுக்குத் தனித்தனியே ஆயிரம் ஆயிரம், பிரமதேவருக்குப் பதினுயிரத்தெழுநூறு, ஆதிசேடனுக்குத் தொண்ணூற்றென்பது, அருகனுக்கு ஒன்பதினுயிரம், புத்தனுக்கு எண்ணுயிரமென்று புராணங்கூறும்; கா. இருபத்தெண். 3-6. தேவகுலம் - கோயில்.

54. கூர்த்த - மிக்க.

56. பாகம் - பக்குவம். 57. துனைய - விரைய.

58. மற்றும் ஒரு மூன்று கம்பம் - நல்லகம்பம், கள்ளக்கம்பம், வெள்ளக்கம்ப மென்பன; இவை முறையே உருத்திரர், திருமால், பிரமன் ஆகிய மூவராற் பூசிக்கப்பெற்றவை; கா. திருவேகம்ப. 86 - 9; திருவேகம்பம் கம்பமென்றும், பெரிய கம்பமென்றும் கூறப்படுமாதலின் மற்றுமொரு மூன்று கம்பமென்றார்; "கால காலனைக் கம்பனெம்மானை", "உமை நங்கை மருவி யேத்தி வழிபடப் பெற்ற, பெரிய கம்பனை" (தே. சுந்தர.)

வாலீசம் - வாலி பூசித்த தலம்; கா. திருவேகம்ப. 104 - 20.

நந்தீசம் - நந்தி பூசித்ததலம்; நந்தி பூசித்தது; கா. தீர்த்த. 137 - ஆம் செய்யுள் முதலியவற்றல் அறியப்படும்.

மயானம் - கச்சிமயானம்: இது தேவர்கள் முதலியோர்களின் உடலிற் புகுந்து அவர்கள் வன்மையைக் கவர்ந்து மெலிவித்த பண்டாசுரனை அழித்தற்கு எல்லோரையும் சாம்பராக்கிப் பின்பு அவனைக்கொன்று மீட்டும் அவர்களைப் படைத்த தலமென்பர்; "அந்தோமுன், மாயன்முதலோருடலை மாய்த்தெதிர்ந்த பண்டனுயிர், சாய வழித்துத் தகமுன் போற் - காயம், கொடுத்தருளுங் கச்சி மயானத்தெங் கூத்தர்" (461 - 3) என்பர் பின்; கா. கச்சிமயான. இருபத்தெண். 9. இது தேவாரம் பெற்ற தலம்

59. மாதவே சஞ்செவ்வந் தீசம் வருணேசம்
மாதலீ சந்திரு மாற்பேறு - தீதில்
60. அனந்தபற்ப நாபேச மானவகத் தீசம்
கனிந்தகட கேசங்காப் பீசம் - முனேந்தவிரா

---

விண்டுவேசம் - திருமால் தான் கண்ட திருநடனத்தைத் திருமகள் முதலியோரும் காணவேண்டிச் சிவலிங்கப் பெருமானைத் தாபித்துப் பூசித்த தலம் ; கா. தழுவ. 150 - 78. (பி - ம்.) 'விண்டு வீசம்'

58 - 9. மத்தள மாதவேசம் - இறைவனுடைய திருநடனகாலத்தில் மத்தளங் கொட்டுவதற்குத் திருமால் வரம்பெற்ற தலம் ; " முன்னர், வரத்தினருள்பெற்ற மத்தளமா யோன்றன், கரத்தினனி யொத்திக் களிப்ப " (192 - 3) என்பர்பின் ; கா. தழுவ. 290 - 99. இதனை முழுவீசமென்பர் பழையகாஞ்சிப்புராணமுடையார் ; சிவாலய. 524.

செவ்வந்தீசம் - வாயுதேவன் செவ்வந்தி மலரால் பூசித்துக் கந்தவாகனென்னும் பேர்பெற்ற தலம் ; " பூமலியக், காவிறைவன் றூவிக் களித்தலான் மெல்லவரும், காலினை யிங்கே கழிப்பரோ " (280 - 81) என்று வாயு பூசித்ததைப் பின்பு குறிப்பிடுவர் ; கா. நவக்கிர. 4.

வருணேசம் - வருணன் பூசித்துத் தலைமை பெற்ற தலம் ; இது கங்கா வரமென்றும் கூறப்படும் ; கா. சருவ. 20.

மாதலீசம் - இந்திரன் தேர்ப்பாகனுகிய மாதலி இராமபிரானுக்குத் தேர்ப்பாகனுகி, இராவணசங்காரத்தின் பின்பு அவருடன் வந்து பூசித்த தலம்; கா. மாசாத்தன். 37. (பி - ம்.) 'மாத வீசம்'

திருமாற்பேறு - திருமால் பூசிக்கச் சிவபெருமான் மகிழ்ந்து சக்கராயுதம் அளித்ததலம் ; " மாதவற்கு.........ஆழி முன்னிக்குத் தந்தாரென்பார் " (248 - 9), " விட்டதொரு பூவுக்குங் கண்வாங்கும் புண்ணியனுர் " (299 - 300) என இத்தலசம்பந்தமான செய்திகளைப் பின்னுங்கூறுவர் ; கா. திருமாற். அந்தரு. 13. இது தேவாரம்பெற்ற தலம்.

60. அனந்த பற்பநாபேசம் - அனந்த பத்மநாபேசம் ; இஃது உமாதேவியாருடைய சாபத்தாற் பாம்புருவங்கொண்ட திருமால் பூசித்துப் பழைய உருவம்பெற்ற தலம் ; கா. அனந்த. பத்மமென்றது பற்பமென வந்தது ; " பற்பநாப னுயர்வறவுயரும் பெருந்திறலோன்.........எற்பரன்" (திருவாய்மொழி.) (பி - ம்.) 'அனந்த பத்மநாபேசம்'

அகத்தீசம் - அகத்தியர் பூசித்த தலம் : கா. தழுவ. 184 - 288.

கடகேசம் - உமாதேவியார் ஏகாம்பரநாதரைப் பூசித்தற்கு முன் கடகமணிந்து பூசித்த தலம் ; கா. தழுவ. 133.

காப்பீசம் - உமாதேவியார் ஏகாம்பரநாதரைப் பூசித்ததற்காகக் காப்பணிந்து பூசித்த தலம் ; கா. தழுவ. 132. (பி - ம்.) 'காப்பேசம்' முனேந்த - முற்பட்ட.

61. மேச்சுரம் வெல்பரசி ராமேச் சுரமபிரா
மேச்சுரம் வாழ்விச் சுவநாதம் - தூச்சிவாத்

62. தான நவக்கிரகே சம்யோகா சாரியர்சூழ்
தானமங்க ளேசந்தா னேதோன்றும் - தானம்

63. இறவாத்தா னஞ்சுரக ரேசந்தீர்த் தேசம்
பிறவாத்தா னங்கச்ச பேசம் - நெறிக்காரைக்

---

60 - 61. இராமேச்சுரம் - இராமர் இராவணனைக் கொன்ற பாவம் நீங்கப் பூசித்த தலம்; கா. மாசாத்தன். 36.

பரசிராமேச்சுரம் - அரசர் குலத்தை அழிப்பதற்குப் பரசுராமர் பூசித்துப் பரசென்னும் ஆயுதத்தையும் வரத்தையும் பெற்றதலம்; "சமர்த்த விராமற், கலங்கு பரசொன் றளித்தான்" (492) என்பர்பின்; கா. பரசு. அந்தரு. 14 (பி - ம்.) 'இராமீச்சுரம்,' 'பரசுராமீச்சுரம்'

அபிராமேச்சுரம் - வாமனர் மாவலியை வெல்வதற்குப் பூசித்து வரம் பெற்றதலம். அபிராமனென்றது வாமன மூர்த்தியை; "ஒன்று வரம், வாமனனுக் கீந்தார்" (294 - 5); கா. அபிராமீ. அரிசாப. 22.

விச்சுவநாதம் - காசியிலும் இத்தலம் சிறந்ததென்று எண்ணி விசுவநாதக் கடவுள் இங்கே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தலம்; கா. சருவ. 21 - 2.

61 - 2. சிவாத்தானம் - பிரமன் பூசித்து வரம்பெற்ற தலம்; "அரியோடுலகயனு மீன்றான்" (286) என்பர்பின்; கா. சிவாத்தான.

நவக்கிரகேசம் - நவக்கிரகங்கள் வழிபட்ட தலங்கள்; கா. நவக்கிர. யோகாசாரியர் சூழ்தானம் - சுவேதர் முதல் இலகுளீசரீறாகிய யோகாசாரியர் தனித்தனியே பிரதிட்டித்துப் பூசித்ததலங்கள்; கா. யோகா. இவை நாற்பத்தெண்ணாயிரமென்பர் **பழைய காஞ்சிப்புராண**முடையார்.

மங்களேசம் - உமாதேவியார் பாங்கியாகிய மங்களை பூசித்ததலம்; "மாக்கருங்கண், மங்களை வேட்ட வரமளித்தார்" (407 - 8) என்பர்பின்; கா. மாசாத்தன். 35.

தானே தோன்றுந் தானம் - தான்றோன்றீசம்; சிவபெருமான் தாமே தோன்றிய இடம். இஃது உபமன்னியமுனிவர் பூசித்துப் பாற்கடலைப் பெற்றதலம்; கா. தான்றோன்றீசப். அவர் பாற்கடலை யுண்டமை, "அயராமைப், பாலுததி யோர்முனிக்குப் பாலித்தார்" (274 - 5) என்று பின்பு கூறப்பட்டுள்ளது. இத்தலம் ஸ்வாயம்புவமென்றும் கூறப்படும்.

63. இறவாத்தானம் - சுவேதர், மார்க்கண்டேயர் முதலியோர் வழிபட்டுச் சாவாவரம் பெற்றதலம்; "இறவாத்தா னத்தி லிருந்தருளானந்தர்"

64. காடுசாத் தேசங் கயிலாயங் கற்கிசம்
ஆடகே சஞ்சி ரமரேசம் - நாடும்

(467) என்பர் பின் : **பெரிய.** திருக்குறிப்பு. 77 ; ஏ. உலா, 26 ; **கந்த.** நகர 92 ; **கா.** இறவாத்.

சுரகரேசம் - சுராக்கனென்னும் அசுரனைச் சிவபெருமான் சங்காரம் செய்ததலம். இங்கே தேவர்கள் பூசித்துத் தங்களுக்கிருந்த வெப்பு நோயைத் தீர்த்துக் கொண்டனர் ; **கா.** சுரகரீச. (பி - ம்.) 'சுரகரீசம்'

தீர்த்தேசம் - தீர்த்தராசமெனவும் வழங்கும். இஃது அம்பிகையின் பூசையை அழித்தற்காக வந்த எல்லாத் தீர்த்தங்களும் பூசித்ததலம் ; **கா.** சருவ. 8 - 11. (பி - ம்.) 'தீர்த்தீசம்'

பிறவாத்தானம் - வாமதேவரென்னும் முனிவர் பூசித்துப் பிறவாவரம் பெற்றதலம் ; ஏ. உலா, 26 ; **கந்த.** நகர. 92 ; **கா.** பிறவாத்.

கச்சபேசம் - கூர்மாவதாரமெடுத்த திருமால் வழிபட்டதலம் ; "வலந் தொழுத, கச்சபத்துக் கிந்தார்" (291 - 2) என்பர் பின் ; **கா.** கச்சபேச. அந்தரு. 44.

63 - 4. நெறிக்காரைக்காடு - திருநெறிக்காரைக்காடு ; இது காரைத் தருக்கள் செறிந்திருந்தமையால் இப்பேர் பெற்றது ; சத்தியவிரதமெனவும் வழங்கும். சிவியென்னு மிந்திரனும் புதனும் பூசித்துப் பேறு பெற்றதலம். இந்திரன் பூசித்தமையால் இந்திரேசமெனவும் கூறப்படும் ; **கா.** திருநெறி. இது **தேவாரம்** பெற்றதலம்.

சாத்தேசம் - மாசாத்தன் தளியென வழங்கும் ; ஐயனர் பூசித்து வரம் பெற்ற தலம் ; **கா.** மாசாத்தன்.

கயிலாயம் - திருமாலும் நாரதரும் திரிபுராதியரை மயக்கிய பாவத்தை நீக்கிக் கொள்வதற்குப் பூசித்ததலம் ; "தொக்கதமக், கன்பரைப் பாழ் மதத்தி லாழ்த்திஞேர் நண்ணுதலும், கொன்பெரும் பாவங் குறைத்திட்டார்" (305 - 6) என்பர் பின் ; **கா.** கைலாயப்.

கற்கிசம் - திருமால் கற்கி (குதிரை) வடிவமெடுத்த பொழுது பூசித்த தலம் : **கா.** வீரராக. 31.

ஆடகேசம் - இரணிசம் ; இரணியன் பூசித்து வரம் பெற்றதலம் ; "இரணியன்பூ சிப்பவர மீந்தார்" (288) என்பர் பின் ; **கா.** இரணீச.

அமரேசம் - ஒவ்வொரு தேவரும் தாம் தாம் முதலென்று அகங்கரித்த பொழுது சிவபெருமான் ஒரு துரும்பினல் அவர்கள் செருக்கினைப் போக்கிய பின்பு, அவர்கள் பூசித்ததலம் ; **கா.** அமரேச ; "செம்மாந்து தற்புகழுந் தேவர்குழு வும்மருள, எம்மான் பிறன்போ லிருந்தோர் துரும்புநிறீஇ, அம் மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே" (**கந்த.** காமதகனப். 41); **கண்ணி.** 311 - ஐப்பார்க்க. (பி - ம்.) 'அமரீசம்'

65. இரே ணுகே சஞ்சவுன கேசங்கா மேசம்
பராசரே சம்பாண்ட வேசம் - வராக

66. புரமணிகண் டேச்சுரநற் புண்ணிய கோடீச்
சுரஞ்சத்த தானஞ்சோ மேசம் - பரவுமிட்ட

67. சித்தி யயிராப தேசமோ ணன்காந்தன்
பத்திபுரி சூழல்பகர் முத்தீசம் - சுத்த

---

65. இரேணுகேசம் - பரசுராமருடைய அன்னையாகிய இரேணுகா தேவி தான் தெய்வமாக வேண்டுமென்று பூசித்து வரம் பெற்றதலம்; **கா.** இரேணு. (பி - ம்.) இரேணுகீசம்'

சவுனகேசம் - சவுனக முனிவர் பூசித்து வீடு பெற்றதலம்; **கா.** சகோதர. 10. (பி - ம்.) 'சவுனகீசம்'

காமேசம் - காமன் பூசித்துப் பேறு பெற்றதலம்; "நான்முறையில், வேட்டடியிற் பூசை விளைத்துவரம் - ஈட்டியநற், காமனை யிங்குக் கடிவரோ (279 - 80) என்பர்பின்; **கா.** சருவ. 2 - 6.

பராசரேசம் பராசரமுனிவர் பூசித்துத் தம் தந்தையாரைக் கொன்ற அரக்கர் கூட்டத்தை அழித்தற்கு வரம் பெற்றதலம்; **கா.** பராச. (பி - ம்.) 'பராசரீசம்'

பாண்டவேசம் - பாண்டவர்கள் தனித்தனியே சிவலிங்கங்களைப் பிரதிட்டித்துப் பூசித்த தலங்கள்; **கா.** பாண்ட. (பி - ம்.) 'பாண்ட வீசம்'

65 - 6. வராகபுரம் - வராகேச்சரமெனவும் வழங்கும்; திருமால் வராகாவதார மெடுத்த பொழுது பூசித்ததலம்; "வியக்கவரம், வன்றிக் களித்தார்" (263 - 4) என்பர்பின்; **கா.** நாரசிங்கிச. 14 - 5; அந்தரு. 6. மணிகண்டேச்சுரம் - சிவபெருமானை விடமுண்ணும்படி செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ளுதற்குத் தேவர்கள் பூசித்ததலம்; "பிரிந்தவுளத், தாழி கடைந் துங்கடுவை யாரக் கொடுத்துமுற்ற, பீழையம ரர்க்குப் பிரித்திட் டார்" (308 - 9) என்பர்பின்; **கா.** மணிகண்டீச. (பி - ம்.) 'மணி கண்டீச்சுரம்'

புண்ணிய கோடீச்சுரம் - திருமால் பூசித்துப் பிரமனையும் உலகையும் படைத்தற்கு வரம் பெற்றதலம்; "அரிதாழ்ந் தயனுடைளிப்ப" (286) என்பர்பின்; **கா.** புண்ணிய.

சத்ததானம் - முத்தியை விரும்பி அத்திரி முதலிய ஏழுமுனிவர்களும் தனித்தனியே சிவலிங்கங்களைப் பிரதிட்டித்துப் பூசித்தத்தலம்; **கா.** சத்ததான.

சோமேசம் - சந்திரன் பூசித்துப் பேறு பெற்றதலம்; "பூசைபுரி, சோமனைக் காதத் துணிவரோ" (280) என்பர்பிள்; **கா.** அந்தரு. 12. (பி - ம்) 'சோமீசம்'

66 - 7. இட்டசித்தி - ததீசிமுனிவரும் பிரமன் முதலியோரும் பூசித்

68. அநேகதங் காவதம்வா ணீசமந்த கேசம்
இனுத லறுஞ்சலந்த ரேசம்-பணுதரே

69 சம்பணம ணீசஞ்சார்ந் தாசயந் தக்கேசம்
வம்பில்சித் தீச மதங்கேசம் - நம்புமரி

---

துப் பேறுபெற்றதலம்; சுக்கிரனுக்கு அமிர்தசஞ்சீவியும் ததீசி முனிவர்க்கு வச்சிரயாக்கையும் சிவபெருமான் வழங்கியதலம்; "ஈங்கென்றும், இட்ட சித்தி நாத ரெனவிருப்பார்", "போக்கி, லமிர்தசஞ்சீவி யவிர்வெள்ளிக் கிந்து, துமியுடற தீசியெனுந் தொல்லோற் -கிமிழ்கொளீஇ, வச்சிர யாக்கை வழங்குமிட்டசித்தீசர்" (298 - 9, 464 - 6) என்பர்பின்; கா. இட்டசித்; அந்தரு. 45.

அயிராபதேசம் - ஐராவதம் பூசித்து இந்திரனுக்கு வாகனமாதற்கு வரம் பெற்றதலம்; கா. அரிசாப. 23. (பி - ம்.) 'அயிராபதீசம்'

ஓணன்காந்தன் பத்திபுரி சூழல் - திருவோணகாந்தன் றளி; வாணசுரனுடைய சேனைத்தலைவர்களாகிய ஓணனும் காந்தனும் பூசித்துப் பேறு பெற்றதலம்; கா. திருவோணகாந்தன்.; இது தேவாரம் பெற்றது.

முத்தீசம் - கருடன் பூசித்துத் தாயின் சிறையை நீக்கிப் பாம்புகளை அலைத்தற்கு வரம்பெற்றதலம்; "கருட, னிகலோ டரவலைத்தா னேத்தி" (286 - 7) என்பர்பின்; கா. முத்தீசப். முத்தம் - விடுபடுதல்.

68. அநேகதங்காவதம் - அநேகபேசமெனவும் வழங்கும்; இது விநாயகர் பூசித்த தலம்; தேவாரம்பெற்றது; கா. அநேகதங். இருபத்தெண். 9. வாணீசம் - வாணசுரன் பூசித்துச் சிவபெருமானைத் தன்னுடைய மதிலின் வாசலைக் காத்தருளும் வரத்தையும் பின்பு சிவகணத் தலைமையையும் பெற்றதலம்; "வாணன்பூ சிப்பநொச்சி வாயில் காத்தார்", "தோளிணைகள், கண்டுதி நீவ வறைகூவுங் காழவுணன், தொண்டுற மீட்டு நலங் தோற்றினர்" (289, 312); கா. வாணீசப்.

அந்தகேசம் - இரணியாட்சன் மகனாகிய அந்தகாசுரன் பூசித்து உலகையாண்டு கடைமுறை அருள் பெற்றதலம்; "மாணவர, மந்தகன் பூசைக்களித்தார்" (289-90); கா. அந்தகேசப். இனுதலறும் - இனுதல் அறும்; இன்னுது அலறு மெனினுமாம். (பி - ம்.) 'அந்தகீசம்'

சலந்தரேசம் - சலந்தராசுரன் வழிபட்டுப்பேறு பெற்றதலம்; "சலந் தரன்பூ சிப்பத் தகவளித்தார்" (291); கா. சலந்தரீசப். (பி - ம்.) 'சலந்தரீசம்'

68 - 9. பணுதரேசம் - நாகங்கள் பூசித்துச் சிவபெருமானுக்கு ஆபரணமாகி அந்த மகிழ்ச்சியால் கருடனைச் சுகமாவென்று கேட்கும் வன்மை பெற்றதலம்; "அரவேத்திச், சுகமே கருடவெனச் சொற்றது" (287); கா. பணுதரேசப்; இருபத்தெண் 8.

70 சாப பயந்திர்த்த தானமா லிங்கமா
தீபதே சம்விடுவச் சேனேசம் - தாபமறு

---

பணமணீசம் - தன்னுடைய படத்திலிருந்த மணிகளால் வாசுகி பூசித்துப் பேறுபெற்றதலம்; இது மணீசமெனவும் வழங்கும்; கா. இருபத்தெண். 235 - 45.

சார்ந்தாசயம் - இங்கேயுள்ள சிவபெருமான் சார்ந்தார் சார்பினுனென்னும் திருநாமம் பூண்டவர்; இது வேதவியாசர் சிவபரத்துவத்தை மறுத்த குற்றந்தீரப் பூசித்ததலம்; கா. சார்ந்தாசயப். இத்தலசம்பந்தமான இச்சரிதையை, "மேவுதலும், பொய்யழிய வேதவியா சன்மையல் போக்கினர்" (269 - 70) என்று குறிப்பிடுவர்பின்.

தக்கேசம் - தக்கன் பூசித்துத் தன் பாவந்தீர்ந்து கணநாதனுகும் பேறு பெற்றதலம்; "தக்கனிங்குச் சாரத் தவறு தவிர்த்தவதற்கு, மிக்க தலைமை விளைத்திட்டார்" (305); கா. தக்கீச. (பி - ம்.) 'தக்கீசம்'

சித்தீசம் - உமாதேவியார் நீராடுகையில் ஓடிய மஞ்சள் நீரிடை எழுந்த மஞ்சணீர்க் கூத்தர் கோயில் கொண்டருளியதலம்; சித்தர்கள் பலர் இறைவனைப் பூசித்துச் சித்திகளைப் பெற்றமையால் இஃது இப்பெயர் பெற்றது; கா. சித்தீசப்.

மதங்கேசம் - மதங்கமுனிவர் ஐம்புலன்களையும் அடக்கியாள்வதற்குப் பூசித்ததலம்; கா. அரிசாப. 22. (பி - ம்.) 'மதங்கீசம்'

69 - 70. அரிசாப பயந்தீர்த்த தானம் - திருமால் பூசித்துப் பிருகு முனிவர் இட்ட சாபத்தைத் தீர்த்துக் கொண்டதலம்; கா. அரிசாப.

மாலிங்கம் - மகாலிங்கம்; திருமாலும் பிரமனும் தாம் தாம் முதன்மையெனத் தருக்கி நின்றபொழுது, சோதிலிங்கமாக எழுந்த சிவபெருமானுல் மயக்கம் போக்கப் பெற்றுத் தாபித்துப் பூசித்ததலம்; "முன்பிருவர், யான் முதன்மை யான்முதன்மை யென்றிகந்தா ரெய்துதலும், தான்முதன்மை யென்னத் தவறழித்தார்" (306 - 7); கா. மகாலிங்கப். ஆதீபதேசம் - கலைமகள் பிரமதேவர் செய்த யாகத்தைத் தடுத்தற்கு நதியாக வந்த பொழுது அந்நதியைத் தடுக்கும் வன்மைபெறும் பொருட்டுத் திருமால் விளக்கொளியாகிச் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்ததலம்; கா. ஆதீபதேசப். (பி - ம்.) 'ஆதிபதீசம்'

விடுவச்சேனேசம் - திருமாலுடைய சக்கராயுதத்தை வீரபத்திரக் கடவுளிடமிருந்து பெறவேண்டி விஷ்வக்ஸேனர் பூசித்ததலம்; கா. விடுவச்; இதனை விண்டுசேனீசமென்பர்; ப. கா. சிவாலய. 321. (பி - ம்.) 'விடுவச்சேனீசம்'

71. வன்னீச் சுரநார சிங்கீச் சுரமாண்டு
கன்னீச் சுரமாகா ளேச்சுரம் - வன்மீக

72. நாதம் பலபத் திரராம நாதமச்ச
நாதமுயர் முக்கால ஞானேசம் - காதம்பம்

73. ஒத்தூர் சதுரா னனசங் கரமும்பர்
ஏத்துமறை நூபுரங்கண் ணீச்சுரம் - தோத்திரிக்கும்

---

71. வன்னீச்சுரம் - அக்கினி பூசித்துத் தேவர்களுக்குரிய அவிர்ப் பாகத்தைப் பெறும் வன்மை பெற்றதலம்; கா. சகோதர. 4 - 8.

நாரசிங்கீச்சுரம் - திருமால் இரணியனை அழித்தற்குப் பூசித்து வரம் பெற்று நரசிங்காவதார மெடுத்து இரணியனைக் கொன்று பின்பும் வழி பட்டதலம். "பூசித்த நரமடங்க ருக்க நயந்தார்", "நாம, நரமடங்கல் போற்றவர நல்கினர்" (288, 295-6) என்பர்பின்; கா. நாரசிங்கீசப்.

மாண்டு கன்னீச்சுரம் - மாண்டுகன்னுமுனிவர் வழிபட்டு ஐந்து தெய்வ மங்கையரை யடைந்ததலம்; "மாண்டுகன்னு மாமுனியால் வானை யரம்பை யர்கட், கிண்டிய போக மியைவித்தார்" (412) என்பர்பின்; கா. சகோதர.

மாகாளேச்சுரம் - மகாகாளனென்னும் நாகம் பூசித்து முத்தி பெற்ற தலம்; கா. கண்ணீச. 12.

71 - 2. வன்மீகநாதம் - தேவர்கள் கீர்த்தியைத் திருமால் வெளவிச் செல்ல அதனைப் பெறுதற்காக இந்திரன் ஒரு புற்றில் கரையானுகி முயன்று தன்னெண்ணம் நிறைவேறப் பெற்றுப் பூசித்ததலம்; கா. வன்மீக. வன்மீகம் - புற்று.

பலபத்திரராமநாதம் - பலபத்திரராமேசம்; இது பலராமன் பூசித்த தலம்; கா. பலபத்திர.

மச்சநாதம் - மச்சீச மெனவும் வழங்கும்; திருமால் மச்சாவதாரம் எடுத்த பொழுது பூசித்ததலம்; "மச்ச நயக்கவர மீந்தார்" (292-3); கா. மச்சீச. இதனைச் சேல்ச மென்பர்; ப. கா. சிவாலய. 463.

முக்கால ஞானேசம் - சில முனிவர்கள் பூசித்து முக்காலங்களையும் அறியும் ஆற்றல் பெற்றதலம்; கா. அரிசாப. 21.

காதம்பம் - கடம்பர் கோயில்; கடம்பையெனவும் வழங்கும்; முருகக் கடவுள் பூசித்ததலம்; கா. இருபத்தெண். 304.

73. ஒத்தூர் - திருவோத்தூர்; வேதபுரியெனவும் வழங்கும். சிவ பெருமான் ஆல நீழலில் இருந்து தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதத்தை உபதேசித்த தலம். "ஆலினிற் கீழிருந் தாரண மோதி" (திருநா. தே.) என்பது ஈண்டறியற்பாலது; கா. அந்தரு. 18; இது தேவாரம்

74. வீரரா கேச்சுரநல் வீராட்ட காசஞ்சேர்
பாரளாஞ் சேனு பதீச்சுரம் - ஏரளாம்

75. மேற்றளிகா ரோணம் விளங்கு பனங்காட்டூர்
போற்று குரங்கணின்முட் டம்போக்கு - நீற்றும்

---

பெற்றது. ஓத்து - வேதம். இங்கேதான் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் ஆண்பனைகளைப் பெண்பனையாக ஆக்கியதும். இச்செய்தியை, "பூவியப்ப, ஆண்பெண்மை யாக்கினு ரப்பெண்ணை வாழுன்றில், மாண் பின்மை யாக மதிப்பரோ" (282 - 3) என்று பின்னர்க் குறிப்பிடுவர்.

சதுரானன சங்கரம் - சிவபெருமான் பிரமதேவருக்கு நான்கு முகங் களினின்றும் மறைவெளிப்பட அருளிய தலம்; கா. இருபத்தெண். 246-56.

மறைநூபுரம் - வேதங்கள் பூசித்து இறைவனுக்குச் சிலம்பாக அமைந் ததும், பிரமன் பிரளயமுடிவிற் பூசித்து வேதங்களைப் பெற்றது மாகிய தலம்; கா. அந்தரு. 19; இருபத்தெண். 302; சிலம்பர் துறையென்பர், ப. கா. உடையார்.

கண்ணீச்சுரம் - கண்ணீசம்; திருமால் பூசித்து விடத்தின் வெப்பை நீக்கிக் கொண்ட தலம்; கண்ணன் - கரிய நிறத்தை யுடையவன்; கா. கண்ணிசப்.

74. வீரராகேச்சுரம் - வீரராகவேசம்; இராமர் வழிபட்டு இரா வணனை அழித்தற்குரிய வீரத்தைப் பெற்ற தலம்; கா. வீரராக.

வீராட்டகாசம் - இறைவன் திருநடனம் செய்கையில் வீரநகை காட்டி யதும், கொங்கணர் பூசித்துச் சித்திகள் பெற்றதும், திருமால் பூசித்துப் பவள நிறத்தை அடைந்ததுமாகியதலம். அட்டகாசம் - நகை. கா. வீராட்ட.

சேனபதீச்சுரம் - முருகக்கடவுள் பூசித்ததலம்; "தேங்கடப்பந் தாரான் திருவருளி னேவலினே, நீங்கி யணையவரு ணீடினர்" (314) என்பர் பின்; கா. குமர கோட்ட. 22 - 3; ஏர் - அழகு. அளாம் = அளாவும் - பொருந்திய.

75. மேற்றளி: திருமேற்றளி; பச்சிமலாயமெனவும் வழங்கும். முருகக்கடவுளுடைய பார்வையால் திருமால் இலிங்கமான தலம்; கா. அந்தரு. 35. இது தேவாரம் பெற்றது.

காரோணம் - கச்சிக்காரோணம். பிரளயகாலத்தில் பிரமன் திருமால் இவர்களுடம்பைச் சிவபெருமான் ஏற்றுக்கொண்டதலம்; திருமகள், பிரு கஸ்பதி, யமன் முதலியவர்களாற் பூசிக்கப்பெற்றது; கா. காரோணப்.

76. உருத்திரர் சோலையீ ரொன்பதின்மர்ச் சேர்த்த
உருத்திரர் நூற்றுவர்க ளூற்றுக் - கருத்திசையப்

77. பத்திபுரி நூற்றுப் பதினெண் டளிபிறவாய்
அத்தளிக டோறு மவிர்கின்ற - முத்துமுதற்

## ஆனந்த வுருத்திர னளவிலாப் பெருமை

78. பல்வகைப்பல் வேறு மணியினும் பாய்கதிரோன்
எல்வகைமைக் கேற்ப விலங்கியாங் - கல்கலுறும்

79. வெவ்வே றுருக்கொண்டு வெவ்வேறு பேர்கொண்டு
வெவ்வே றருள்கள் விளைத்தாலும் - எவ்வமறும்

80. மானிடரின் வானவர்கள் வானவரின் மாமலரோன்
ஆனவனின் மாயோ னவன்றன்னின் - ஞானமிகு

81. மாதவர்க ளன்னவரின் மாகணங்க ளன்னவற்றிற்
சாதலறும் பூதத் தலைவர்கள் - ஓதவரிற்

---

முருகவேளும் உமாதேவியும் இறைவன் காயத்தில் ஆரோகணஞ் செய்த தல மெனவுங் கூறுவர்; கா. அந்தரு. 36-8; இது தேவாரம் பெற்றதலம்.

பனங்காட்டூர் - வன்பார்த்தான் பனங்காட்டூர்; தேவாரம் பெற்றது; பனங்காடென வழங்கும்.

குரங்கணில் முட்டம் - குரங்கு, அணில், காக்கை யென்பவை பூசித்த தலம்; முட்டம் - காக்கை; இது தேவாரம் பெற்றது. போக்கு நீற்றும் - குற்றத்தை அழிக்கும்.

76. உருத்திரர் சோலை: "தூண்டு சோதியொன் றெழுந்தருள் சுரக் குஞ் சுரர்கள் வந்துசூழ ருத்திர சோலை" (பெரிய. திருக்குறிப்பு. 84); சிவபெருமான் உருத்திரர்களைப் படைத்து அவர்களுக்கு அதிகாரம் நல்கிய தலம். கா. இருபத்தெண். 271 - 3. ஈரொன்பதின் மர்ச்சேர்ந்த உருத்திரர் நூற்றுவர்கள் - நூற்றுப்பதினெட்டு உருத்திரர்கள்.

77, நூற்றுப்பதி னெண்டளி: கா. திருமேற்றளி. 2 - 3.

78. மணி - இரத்தினங்கள்; பல்வகையென்றது ஒன்பதுவகையைச் சுட்டியது. பல்வேறென்றது ஒவ்வொரு வகையிலும் உள்ள பலவகைகளை. கதிரோன் - சூரியன். எல்வகைமைக்கு - ஒளியின் வேறுபாட்டிற்கு. இலங்கியாங்கு - விளங்கினாற்போல. அல்கல் - நிலைத்தல்.

79. எவ்வம் - துன்பம்.

80. மானிடரின் - மானிடரைக் காட்டிலும். மாமலரோன் ஆன வனின் - பிரமனைக்காட்டிலும்.

82. சேயிலைவே லோனவனிற் றிண்களப மற்றதனிற்
பாயமணி மேகலைய பார்ப்பதி - மீயுயர்ந்தாங்

83. கேணையர்கள் போற்று மிடமூர்த்தந் தம்மினுமம்
மானனைய நோக்கி வழிபட்டுத் - தான்மகிழ்ந்த

84. தூங்குசினை மாவடியுஞ் சோதிலிங்க முஞ்சிறந்த
ஓங்குருத்தி ரேச முயரிலிங்கம் - ஆங்கவற்றோ

85. டொக்கு முமையா ளுருப்பாதி தன்காணி
கைக்கொண்ட வேகன் கதியமுழு - மெய்க்கொண்டு

86. நாமமுங் கொண்ட நலத்தகையோர் போற்றுதலிற்
காம ரவற்றுள்ளுங் காழிலோர் - தாமருவும்

87. ஆனந்த ருத்திரே சத்தமல மூர்த்தமே
தானந்த னோடுந் தலையாவ - தூனம்

---

82. சேயிலைவேலோன் - செம்மையாகிய இலை வடிவமுள்ள வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள் ; " சேயிலை வெள்வேல் " (குறுந். 15 : 5.) திண்களபம் - திண்ணிய யானைமுகத்தையுடைய விநாயகர். மீ உயர்ந் தாங்கு - மேன்மேலே உயர்ந்தாற்போல. (பி - ம்.) 'மேகலைப்பார்ப்பதி'

83. இடம் மூர்த்தம் தம்மினும் - இடங்களையும் மூர்த்தங்களையும் காட்டிலும். மான் அனைய நோக்கி - உமாதேவியார்.

84. தூங்கு - தொங்கும். மாவடி - மாமரத்தின் அடி. சோதிலிங்கம் - ஸ்ரீ ஏகாம்பரநாதர் ; " அங்கதனிற் **சோதிலிங்க** வடிவாகியாமென்று மமர் வேம் " (கா. தல. 28.) உருத்திரேசம் உயர் இலிங்கம் - உருத்திரேசங்களும் அங்கேயுள்ள உயர்ந்த இலிங்கங்களும் ; உருத்திரேசம் - உருத்திரர் பூசை செய்த சிவலிங்கப் பெருமான்கள் எழுந்தருளியுள்ள தலங்கள். (பி - ம்.) 'ஓங்குருத்தி ரேசவுயரி லிங்கம்'

85. ஏகன் - சிவபெருமான். கதிய = கதுவிய - பற்றிய.

86. நாமம் - உருத்திரரென்னும் திருநாமம். காழ் - குற்றம்.

85 - 6. சிவபெருமானுடைய முழு வடிவத்தையும் அவருக்கேயுரிய உருத்திரரென்னும் திருநாமத்தையும் பெற்றவர்கள் பூசித்த தலங்களும் சிவலிங்கங்களும் மாவடியையும் சோதிலிங்கத்தையும் ஒக்கும். மிகச் சிறப் புற்ற மாவடியையும் ஏகம்பரையும் இவை ஒக்குமென்பதைப் புலப்படுத் தற்கு இத்துணைக்காரணம் கூறினர்.

போற்றுதலின் (86) ஒக்கும் (85) என்க.

87. தானம் தன்னோடும் - இடத்தோடும். ஆனந்த ருத்திரேச மூர்த்த மும் அந்தத் தலமும் மற்றவற்றைக் காட்டிலும் சிறந்தன. சிறந்தமைக்குக்

88. தவிர்பொருள்கள் பற்பலவுந் தாழ்வில்சுக மற்றும்
அவிர் துறக்க மாதி யவையும் - இவர்கின்ற

89. மேலான வின்ப விளைவுந் தலைமைகளும்
மாலாவ வென்று மதித்தொரீஇச் - சாலாத

90. ஆனந்தத் தானந்த லன்றி யினிதெழூஉம்
ஆனந்த மிக்களிக்கு மாட்சியாற் - றானந்த

91. ஆனந்த நாம மளாவலி னத்தகைய
ஆனந்த ருத்திரே சத்தென்றும் - ஆனந்தன்

92. ஏகம்பம் போல வினிதரசு வீற்றிருந்து
மாகம் பணிய வளங்கொழிப்போன் - மேகம்

## நந்தன வனமும் சந்தநீர் நிலைகளும்

93. படியுமிளந் தெங்கு பயில் கமுகஞ் சூதம்
கடிகொள் வருக்கை கதலி - அடரும்

94. முருகு நரந்த முகிழ்தாடி மங்கள்
கருணைமஞ்ச ளிஞ்சி கலந்து - பெருகு

95. வளங்கொள் படப்பை மருங்குடுத்துத் தீந்தேன்
துளங்குமலர்ப் பிண்டிதொகு நாகம் - இளங்கணிகள்

---

காரணம் பின்புகூறப்படுகின்றது. ஆனந்தருத்திரரை உருத்திர கணங்களுள் முதல்வரென்பர்.

88. துறக்கம் - சுவர்க்கலோகம். இவர்கின்ற - விரும்புகின்ற.

89. மாலாவ என்று - மயக்கத்தைச் செய்வனவென்று. ஒரீஇ - நீங்கி. சாலாத - நிரம்பாத.

89 - 90. சாலாத ஆனந்தம் - சிற்றின்பம். ஆனந்தத்தால் நந்தல் அன்றி. எழூஉம் - எழுகின்ற. தான் : அசைநிலை. நந்த - பெருக.

91. அளாவலின் - கலத்தலால். ஆனந்தருத்திரேசத்து - ஆனந்தருத்திரேசமென்னும் திருப்பதியில். ஆனந்தன் - சிவபெருமான்.

92. வீற்றிருந்து - ஒப்பற்ற சிறப்புடனிருந்து.

93. கமுகம் - பாக்குமரம். சூதம் - மாமரம். கடி-நறுமணம். வருக்கை - பலா.

94. முருகு - வாசனை. நரந்தம் - நாரத்தை. தாடிமங்கள் - மாதுளமரங்கள். கருணை - ஒருவகைக் கிழங்கு.

95. படப்பை - தோட்டம். பிண்டி - அசோகமரம். நாகம் - ஒருவகை மரம். கணிகள் - வேங்கைமரங்கள்.

96. ஆர நறுந்தேக் ககில்சரள மாச்சாமந்
தாரமுருக் குத்தா தகிவெள்ளில் - வேரல்

97. மருதுகுமிழ் போதி மகிழ்வழைபுன் னாகத்
தருவெவையும் வேலியெனச் சார்ந்து - முருகுவிரி

98. மல்லிகை சாதி மயிலை குருக்கத்தி
முல்லை குளவி முதிர்செருந்தி - வில்லம்

99. கணவிரங்கூ தாளங் கடுக்கை கடம்பு
மணம்விரிந்த நந்தியா வட்டம் - இணர்விரியும்

100. பாடல நீள்சண் பகந்தமா லங்கோங்கு
நீடிய நந்த வனநிரந்து - தோடுவிரி

101. தேங்கமல மொண்குமுதஞ் செங்கழுநீர் நீலநெய்தல்
ஆங்கமலி பொய்கை யணியோடை - தேங்குபுனல்

102. வாவிநறுங் கூவன் மணற்கேணி வண்புனற்கால்
தேவரும் வீழச் செறிந்தோங்கிப் - பூவைமயில்

103. கிள்ளைபுருச் சேக்குங் கெழுமணிசெய் மாடநிரை
அள்ளுமெழின் மேடை யகன்றெற்றி - ஞெள்ளல்

---

96. ஆரம் - சந்தனமரம். தேக்கு அகில். சரளம் - ஒருவகை மரம். முருக்கு - முள்ளுமுருங்கை. தாதகி - ஆத்தி. வெள்ளில் - விளா. வேரல் - சிறுமூங்கில்.

97. குமிழ் - ஒருவகை மரம். போதி - அரசமரம். வழை - சுர புன்னை. புன்னாகம் - புன்னைமரம்.

98. மயிலை - இருள் வாசி (இருவாட்சி.) குளவி - மலை மல்லிகை. செருந்தி - செருந்திமரம். வில்லம் - வில்வம்.

99. கணவிரம் - அலரி. கூதாளம் - வெண்டாளி. கடுக்கை - கொன்றை. இணர் - பூங்கொத்து.

100. பாடலம் - பாதிரி. தமாலம் - பச்சிலைமரம். நிரந்து - நிரம்பி. தோடு - பூவிதழ்.

101. நீலமும் நெய்தலும். ஆங்க: அசை. பொய்கை - மானிட ராக்காத நீர்நிலை.

102. வாவி - குளம். கூவல் - கிணறு. கால் - வாய்க்கால். வீழ - விரும்ப. பூவை - நாகணவாய்ப்புள்.

103. சேக்கும் - தங்கும். எழிலை அள்ளுமென மாறுக. தெற்றி - ஒரு வகைத்திண்ணை. ஞெள்ளல் - தெரு.

104. தலைப்பெய்த வீதி தலைத்தலைநேர் போகி
மலைப்பெய்த யாரு மலிந்து - நிலைப்பெய்தி

## பொருவில் ஆனந்தன் திருவிழாச் சிறப்பு

105. வந்தொழுகும் வேக வதிமருங்கு வீற்றிருந்த
அந்தநெடுஞ் சூழ லதினின்றும் - சுந்தரஞ்சேர்

106. வானுலக மேன்மைபெற மண்ணுலகஞ் செம்மாப்ப
ஈனவிடர் முற்று மிரிந்தோட - ஆன

107. அறந்தழைப்ப வன்ப ரகந்தழைப்ப வன்பின்
திறந்தழைப்பச் செல்வந் தழைப்ப - மறந்தழைத்த

108. வேற்கணு ருள்ளம் விடைகொள்ள நல்லுலா
ஏற்குமா கொள்ள வினிதுறீஇ - மாற்குமால்

109. கொள்ளுந் திருவழகு கொண்டுவெவ் வேறுபல
ஒள்ளிய வூர்தி யுவந்தருளி - நள்ளுறுநாள்

110. தெள்ளிதிற் காலந் தெரிப்போர் துயிலெழுப்பப்
பள்ளி யறைதணந்து பாவையொடு - மெள்ளப்

111. புறம்போந் தருளிப் பொழிகதிர்மா ணிக்கத்
திறம்பூண்டு விண்ணோங்கு செல்வ - நிறம்பூண்டு

112. பன்மணி மாலைகளும் பல்கனி மாலைகளும்
பன்மலர் மாலைகளும் பைம்பொன்னின் - வின்மலிய

---

104. யாரும் மலைப்பு எய்த; நிலைப்பு - நிலைத்தல்.

105. வேகவதி - ஒருநதி. சூழல் - இடம்.

106. செம்மாப்ப - இறுமாப்ப. இரிந்தோட - கெட்டோட. ஆன - ஆகிய.

107. திறம் - கூறுபாடு. அன்பின்திறம் - அன்பு, ஆர்வம், காதல், ஆதரம் என்பவைகள். மறம் - வீரம்.

108. விடை - விடுத்தல். நல் உலா - நல்லபவனி. ஏற்குமா - பொருந்துமாறு. உறீஇ - உற்று. மாற்கும் - திருமாலுக்கும். மால் - மயக்கம்.

109. ஊர்தி - வாகனங்கள். நள்ளுறுநாள் - இடையாமத்தில்.

110. காலம் தெரிப்போர் - துயிலெழுப்புவோர். தணந்து - நீங்கி. பாவையோடு - அம்பிகையோடு.

111. பன்மணிமாலைகள் - நவரத்னமாலைகள். கனிமாலை - பழங்களாற் றொடுக்கப்பட்ட மாலை. வில்மலிய - ஒளிமிக.

113. ஆக்கிய பூந்தொடையு மாடிகளுஞ் சாமரையும்
தூக்கியகஞ் சுற்றிற் றுயல்கிற்பப் - பூக்கணமும்

114. மிக்க மருக்கொழுந்தும் வெய்யமரு வும்வேரும்
தொக்க படலே சுடர்ப்பட்டும் - தக்கவெலாம்

115. சித்திரித்த பட்டுஞ் செறிய விதானித்துப்
பைத்த மணிக்கம் பலம்படுத்துப் - பித்தியெலாம்

116. கண்ணடியும் பாவைகளுங் காமர் மணிவிளக்கும்
வண்ணமலர்ப் பட்டும் வதிவித்துத் - திண்ணியதூண்

117. வாருறைகள் சேர்த்து மருங்குமலி பூம்பந்தர்
ஆருமணித் தூண்க ளவைதோறும் - நேரும்

118. கதலிமடற் பூகங் கனிபலவும் யாத்து
மதவுவண்ணத் தூசு வயக்கிக் - கதிற்பசும்பொற்

119. சுண்ணமுந் தாதுந் தொகுவிரையும் பன்மணியும்
கண்ணகு பூவுங் கமழ்சாந்தும் - வெண்ணிறத்த

120. வான்பொரியு மச்சுதமும் வண்கடுகுங் குங்குமமும்
நானநறு நீரு நனிசிந்திக் - கானமென

---

112. பூந்தொடை - பூ மாலே. ஆடிகள் - கண்ணுடிகள். தூக்கி - தொங்கும்படி கட்டப்பட்டு. அகத்திலும் சுற்றிலும். துயல்கிற்ப - அசையாநிற்க.

113. வெய்ய - விரும்புதற்குரிய ; வெம்மை - விருப்பம். வேர் - வெட்டிவேர். படலே - தழை விரவிய மாலே.

114. விதானித்து - மேலேகட்டி. பைத்த - ஒளிமிக்க. மணிக்கம்பலம் - ரத்னகம்பலத்தை. படுத்து - கீழேவிரித்து. பித்தி - சுவர்.

115. மணி விளக்கு - மாணிக்கத்தீபம். மலர்ப்பட்டு - பூத்தொழில் அமைந்தபட்டு. வதிவித்து - தங்கச்செய்து. தூண் - தூண்களுக்கு.

118. யாத்து - கட்டி. மதவு - அழகு. வண்ணம் - நிறம். கதிர் - ஒளி. (பி - ம்.) 'மதர்வு'

119. சுண்ணம் - பொடி. தாது - பூந்தாது. கள் நகு - தேன் பெருகுகின்ற.

120. பொரி - நெற்பொரி. அச்சுதம் - அறுகும் அரிசியும். கடுகு - சிறுகடுகு. நானம் - புழுகு. நறுநீர் - பனிநீர். கானம் - காடு.

121. நீண்ட கொடிநிறுவி நித்திலப்பொற் றோரணங்கள்
காண்டகைய சுற்றிற் கதிர்ப்பித்துப் - பூண்டகைய

122. பாவை நடமாடப் பல்லோ வியப்படங்கள்
கோவைபட வாங்காங்குக் கொள்வித்துப் - பாவு

123. படம்விரித்து நான்முகத்தோன் பார்த்தயிர்ப்பச் சீர்த்த
தடவுமணி மண்டபத்தைச் சார்ந்து - கடவுள்

124. மடங்கலணை யேறி வதிந்து பழைய
விடங்கவணி முற்றும் விலக்கி - உடங்கமர்ந்த

## செஞ்சடை உருத்திரன் மஞ்சனம் ஆடல்

125. பாவைமகி ழெண்ணெய் பயினெல்லி மாமஞ்சள்
ஆவின்வரு மைந்து மளாவியது - தாவினறும்

126. பாறயிர்நெய் தேன்வேழப் பைஞ்சாறு பல்லமிர்தம்
வீறு பலவிரத மென்கனிகள் - ஊறுமிள

127. நீர்சந் தனக்குழம்பு நீவில் விரைநறுநீர்
கூர்சந்த வேதக் குருக்கலநீர் - சீர்தந்த

---

121. நிறுவி - நிறுத்தி. சுற்றில் - நாற்புறத்திலும். கதிர்ப்பித்து - ஒளி விளங்கச் செய்து.

122. பாவை - யந்திரப்பாவை. ஓவியப்படங்கள் - சித்திரமெழுதியபடங்கள். கோவை - கோத்தல்.

123. படம்விரித்து - நடைப் பாவாடையை விரித்து. அயிர்ப்ப - சந்தேகிக்க. சீர்த்த - சிறப்புற்ற ; அழகுபெற்ற. தடவு - பெரிய.

124. மடங்கல் அணை - சிங்காதனம். பழைய விடங்க அணி - முன்பிருந்த பேரழகைச் செய்யும் அலங்காரங்கள். உடங்கு - கூட.

125. பாவை - உமாதேவியார். நெல்லி - நெல்லிக்காய் விழுது. மா - அரிசிமா. மஞ்சள் - மஞ்சட்காம்பு. ஆவின் வரும் ஐந்து - பஞ்சகவ்வியம். தா இல் நறுமை.

126. வேழப்பைஞ்சாறு - கருப்பஞ்சாறு. பல் அமிர்தம் - பஞ்சாமிர்தம். பல இரதம் - பல சுவையையுடைய ; பல வென்பது கனிகளுக்கு அடை; பழங்களின் சாறுமாம்.

127. நீவில் - நீக்குதலில்லாத. கூர் சந்தம் - மிக்க சந்தங்களையுடைய. சந்தம் வேதத்திற்கு அடை. வேதக்குருக்கலநீர் - ஸ்நபன கலசங்களிலுள்ள தீர்த்தங்கள் ; குரு - நிறம்.

128. எல்லா முறையி னினிதாடி மெய்யீரம்
நல்லா யிழைப்பட்டி னன்கொற்றி - வில்லார்

## துப்பனை யவன்கோள் ஒப்பனை வகைகள்

129. மணித்தலைநாண் கொண்டு வயங்கரையின் முற்றும்
மணிக்குயின்ற பொன்னுண் வயக்கித் - தனக்குமிச்சில்

130. நாப்பட்ட கோவணமு னண்ணிடத்தி லொண்கிரணத்
தூப்பட்டுக் கோவணத்தைச் சூழ்வித்து - நீப்புறுவர்

131. கொம்பனையார்க் கன்றிவறங் கூரா வுறுப்பனைத்தும்
செம்பட் டுடையாற் றிகழ்வித்து - வம்புடைமேற்

132. செம்பொற் கிரணச் செழுந்தூ சிருபாலும்
பம்புற்ற தொங்கல்பயி லச்சாத்தி - நம்புற்ற

133. குங்குமங் கோரோ சனைபுழுகு கத்தூரி
பொங்குகருப் பூரம் புதுப்பனிநீர் - எங்கும்

134. விரைக்கக் குழைத்தெடுத்த மென்னறும்பூஞ் சாந்தம்
வரைக்குநிகர் மார்ப மெழுகித் - திரைக்கும்

---

128. மெய் ஈரம் - திருமேனியிலுள்ள ஈரத்தை. ஆய் இழை பட்டின் - ஆராய்ந்த நூல் இழையாலாகிய திருவொற்றுடையால்.

129. மணித்தலைநாண் - மாணிக்கத்தைத் தலையிலே மட்டுங்கொண்ட பாம்பாகிய அரைஞாண். முற்றும் மணி குயின்ற பொன் நாண் - முழுவதும் மாணிக்கங்கள் பதித்த பொன்னாலாகிய அரைஞாணை. பழைய நாணுக்கும் இதற்கும் உள்ளே வேறுபாடு கூறியபடி. மிச்சில் - எச்சிலையுடைய.

130. நாப்பட்ட கோவணம் - பிரமன் நாவில் ஒலிக்கும் வேதமாகிய கோவணம்; "மறைக்கோ வணத்தான்" (197) என்பர் பின். தூ - பரிசுத்தம். நீப்பு உறுவர் - துறத்தலையுடைய. தாருகாவனத்து முனிவர்.

130 - 31. உறுவர் கொம்பு அனையார்க்கு அன்றி - முனிவர்களுடைய பத்தினிமார்க்கல்லாமல். வறம் - வறுமை ; அஃதாவது ஆடையின்மை. வம்பு - புதுமை, வாசனை.

132. பொற்றூசு - பொன்னுடையை. தொங்கல் - தொங்குதல். நம்பு - விருப்பம்.

134. விரைக்க - மணம்வீச. மெழுகி - பூசி. திரைக்கும் - அலையை வீசுகின்ற.

135. மதுமலர்ப்பூந் தாது மணிதகர்த்த சுண்ணம்
அதிகவிரைத் தூளியுமே லட்டிக் - கதுவுபுனல்

136. ஈரம் வறள வியம்பு புகையைந்தும்
சாரன் மழையிற் றவழ்வித்துப் - பாரக்

137. கருநீற வாருயிர்க்குக் காசற்ற கற்பத்
திருநீறு நெற்றி திருத்திக் - குருநீ

138. றழியாது பாங்க ரடியருளந் தோறும்
ஒழியாத் திலக முறுத்துப் - பொழிசீதக்

139. கங்கைமக ளோடு கலைமதியஞ் சேர்ந்திருத்தல்
தங்கு மிடமுறையிற் சான்றூலும் - அங்கே

140. விதிர்க்கு முலகர் விழிக்கொளிப்பான் போலக்
கதிர்க்குமணி மோலி கவித்துக் - கொதிக்குமொரு

141. கொக்கிறகோ வென்னக் குருவயிரங் கைசெய்த
தொக்ககதிர்ச் சூட்டுச் சுடர்வித்துத் - தக்கதந்தை

142. தாயுந் தளரச் சரந்தொடுக்குந் திக்கடவுட்
காயுங் கடவுட் கதிர்ப்பெய்தல் - ஏயுமஃ

---

135. மணி தகர்த்த சுண்ணம் - மாணிக்கத்தை உடைத்து உண்டாக்கின பொடி; "நவமணிகளும், பொன்னும், சந்தனமும் கருப்பூர முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்திடித்தலின்" (மதுரை. 399, ந.) அதிக விரைத்தூளி - கதம்பப்பொடி. மேல் அட்டி - சந்தனப் பூச்சின்மேற் சொரிந்து.

136. புகை ஐந்தும் - சந்தனம் முதலிய ஐந்து உறுப்புக்களாலாகிய ஐவகைப் புகைகளையும். மழையின் - மேகம்போலவே. (பி - ம்.) 'வறல'

137. கரு நீற - பிறவி சாம்பராக. ஆருயிர்க்குக் கரு நீற வென்க. கற்பம் - திருநீற்று வகையுள் ஒன்று. இக்கண்ணி, "தொழுதெழுவார் வினைவள நீறெழ நீறணியம்பலவன்" (திருச்சிற். 118) என்பதைத் தழுவி வந்தது.

139. இடமுறையிற் சான்றூலும் - ஆகாயம் சிவபெருமானுக்குக் கேசமாதலின், பிறையும் கங்கையும் ஓரிடத்தில் இருத்தல் சால்புடைத் தாயினும்.

140. விதிர்க்கும் - நடுங்கும். மோலி - கிரீடம். (பி - ம்.) 'வெதிர்க்கும்'

141. கொக்கிறகு - கொக்கு வடிவங்கொண்டு வந்த அசுரனைக் கொன்று அவனைக் கொன்றதற்கு அறிகுறியாக அணியப்பட்ட அதன் இறகு. கை செய்த - பதித்த. சூட்டு - நெற்றிச்சூட்டென்னும் அணி.

141 - 2. தந்தைதாய் - திருமாலும் திருமகளும். சரம் - அம்பு. இக்

143. தென்றுலுந் தீயார்க் கிடங்கொடா ரென்பதுற
வென்றுலும் பட்ட மிளிர்வித்து - நன்றே
144. களிக்குழுடன் மாயுங் கரிசடுத்தா ரேனும்
அளிக்குணத்தா ரங்கமழி யாமை - தெளிக்குதல்போல்
145. வெற்றி மதனுயர்த்த வெய்யகொடி வீற்றிருந்த
கொற்ற மகரக் குழையணிந்து - பெற்றசுகம்
146. நல்லா ரிடத்திற் பிறந்தாலு நல்லார்தாம்
செல்லா விடத்திற் செறித்தாலும் - பொல்லாதார்
147. பண்பிற் றிரியாப் பரிசேபோ லாலாலம்
கண்பொத்து நீலக் கறைமிடற்றுத் - திண்புலத்தார்
148. மீட்டுமொரு சூழ்ச்சியினவ் வெய்யோரை மாய்ப்பதுபோல்
ஈட்டுமணிக் கட்டுவட மேய்வித்து - வேட்டுழல்சிற்
149. றின்பினர்க ளின்ப விளைவேயென் றேமாப்ப
அன்பினர்க ளாரா வருளென்னும் - கொன்பல்
150. வளைத்தழும்புங் கொங்கை மணிச்சுவடுங் கண்கள்
திளைப்ப வெளிச்சிறப்ப வேனும் - அளிப்பின்

---

கடவுள் - தீயசெயலுடைய மன்மதனை. காயும் கடவுள் - எரித்த நெற்றிக் கண்ணுகிய அக்கினிதேவன். கதிர்ப்பு - ஒளிவீசுதல். அஃது ஏயும் - அது பொருந்தும்.

143. தீயார் - அக்கினிதேவன், கொடியவர். வென்று ஆலும் பட்டம் - பிற அணிகளை வென்று ஒளிவீசும் நெற்றிப்பட்டத்தை.

144. அளிக்குணத்தார் - வண்டாகிய நாணையுடையார் ; அன்பாகிய குணத்தையுடையாரென்பது மற்றெரு பொருள்.

145. கொடி - மன்மதனுடைய கொடியின்கண். மகரக்குழை - மகரமீன் வடிவமாகிய குண்டலத்தை. சுகம் பெற்ற. (பி - ம்.) 'வெற்றி சுகம்'

146. நல்லாரிடமென்றது பாற்கடலை. செல்லா இடமென்றது திருமிடற்றை.

147. கண் பொத்தும் - கண்டோருடைய கண்களை ஒளிமழுங்கச் செய்யும். திண்புலத்தார் - வலிய அறிவையுடையவர்கள்.

148. சூழ்ச்சி - ஆலோசனை. மாய்ப்பது - கொல்லுவது, மறையச் செய்வது. கட்டுவடம் - கழுத்திலணியும் ஒருவகை அணி. வேட்டு - புலன்களை விரும்பி.

149. ஆரா - தெவிட்டாத.

150. வளைத்தழும்பும் கொங்கைச்சுவடும் அம்பிகை தழுவினமையாலுண்டானவை.

151. றிருவர்பா லெய்தார்க ளென்னவெண்ணி யாங்குக்
குருமணிக்கே யூரந்தோட் கோத்து - மருமத்துப்

152. பொன்னரி மாலைகளும் பூவினறுந் தொங்கல்களும்
மின்னகு மொன்பான் வியன்றொடையும் - நன்னர்

153. இலைமுகப்பைம் பூணு மிருங்கண்ணித் தாரும்
குலவுசெழுங் கொன்றையொடுங் கூர்த்திட் - டுலகமெலாம்

154. காப்புக் கமைந்ததற்கோர் காப்பின்றே யாதலிற்பொற்
காப்புக்குங் காப்புக் கரமாக்கி - நீப்பிலொற்றை

155. ஆழி யுருட்டு மகங்கை விரலூறும்
ஆழி பலபூண் டவிர்வித்துப் - பீழை

156. கழல வினைகள் கழல மலங்கள்
கழலக் கழல்கழற்கால் வீக்கிக் - கழலமுன்னர்ப்

157. போதந் தொளித்த புரையோனைக் கொன்றுபுவி
மீது தனைவிளங்கு வித்ததிறல் - மாதவனைத்

158. தாட்கவைஇக் காணவினிச் சாரென் றழைப்பனபோல்
ஆர்க்கு மறைநூ புரமணிந்திட் - டேற்கவின்னும்

---

151. இருவர் - விநாயகரும் முருகக்கடவுளும். கேயூரம் - வாகுவலயம்- மருமம் - மார்பு.

152. ஒன்பான் வியன்தொடை - நவமணிமாலை.

153. இலைமுகப்பைம்பூண் - ஒருவகை ஆபரணம்; "விற்குணமே யிலைமுகப்பைம் பூணெனமார் பிடைக்கிடத்தும் விடங்கன்றன்னை" (ஆனந்த. பதிற். 8); "இலைமுகப் பைம்பூ ணிறை" (நீதிநெறி.) கண்ணித் தார்: ஒருவகை மாலை; "தண்டிற் கட்டுங் கண்ணிகளும்" (பெரிய. முருக. 9.) கூர்த்திட்டு - மிக அணிந்து.

153- 4. உலகம் எல்லாம் காப்புக்கு அமைந்த தற்கு - உலகங்களை எல்லாம் காத்தற்கு அமைந்த தனக்கு. காப்பென்னும் பூணுக்குக்கைகள் காப்பென்பது யாவரும் அறிந்ததே. காப்பைக் கைநழுவாமற் செய்யும். நீப்பு இல் - நீத்தல் இல்லாத.

154 - 5. ஒற்றை ஆழி உருட்டும் அகங்கை - ஓர் ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்தும் அகங்கை; "ஒருதனி யாழி யுருட்டுவோ னெனவே" (சிலப். க : 68.) ஆழிபல - மோதிரங்கள் பலவற்றை. பீழை - துன்பங்கள்.

156. வீக்கி - கட்டி.

157 - 8. புரையோனை - குற்றமுடைய சோமுகாசுரனை. அவனைக்

159. வேண்டு மணிபலவு மெய்ப்படுத்து வெங்கதிரோன்
காண்டகு மண்டிலத்துக் கண்ணுற்று - மாண்டதன

## ஏற்றுறு பரனுக் காற்றுறு முகமன்

160. தேர்விளக்கி யாங்கரவுண் டனுமதி போலுறைபோய்ச்
சீர்விளங்கு மாடி தெரிந்தருளிப் - பார்துளங்கப்
161. பல்லியங்க ளார்ப்பவிரு பாற்கவரி துள்ளமணி
வில்லுமிழ் வெண்கவிகை மேனிழற்ற - மெல்லமெல்ல
162. வேத்திரத்திண் கையர் மிடைசனநீக் கக்கொடுபோய்
யாத்த வெழினி யிடம்வீழ்த்து - மூத்தவன்பின்
163. வைத்தநறும் பாளிதமும் வண்டயிர்நெ யக்காரம்
மெத்து சுவைப்பயறு மென்கடுகு - பொத்து
164. புளிமுதல்வெவ் வேறுவிராய்ப் போக்கின் றமைத்த
மிளிரமுதும் வெற்ற வமுதும் - ஒளிர்கருனை

---

கொன்று திருமால் வேதங்களைப் புவியிற் கொணர்ந்த செய்தி இங்கே அறி தற்பாலது. மாதவனை - திருமாலை. தாள் கவைஇ - திருவடியைச் சூழ்ந்து. மறைநூபுரம் - வேதமாகிய சிலம்பு; "மறைச்சிலம்பான்" (467); "மறையே நமது நூபுரமாம்" (திருவிளை. 31 : 9.) வேதமாகிய சிலம்பினெலி திருவடியைத் தரிசிக்க வருகவென்று திருமாலை அழைப்பது போன்று உள் ளது. இக்காஞ்சியிலுள்ள வேதநூபுர மென்னும் ஒரு தலத்தின் பெயரும் இங்கே அறிதற்பாலது.

159 - 60. மெய்ப்படுத்து - திருமேனியில் அணிந்து. வெங்கதிரோன் மண்டிலம் - சூரியமண்டிலம். சூரியமண்டிலத்திற் சிவபெருமான் இருத் தல், "இரவி மண்டிலத் துறையு நாயகன்" (கா. வயிர. 17) என்பதனாலும் அறியப்படும். கண்ணாடிக்கு மதியும் அதன் உறைக்கு மதியை விழுங்கிய பாம்பும் உவமை; கண்ணாடிக்கு மதி உவமை: "கற்றை வெண்மதி சாள ரத் தாடியிற் காட்டும்" (நைட. நகரப். 3.) ஆடிதெரிந்தருளி - கண்ணாடி யைப்பார்த்து. துளங்க - நடுங்க.

161. கவிகை - குடை.

162. வேத்திரம் - பிரம்பு. யாத்த எழினி - கட்டிய திரைச்சீலையை. மூத்த அன்பு - முதிர்ந்த அன்பு; "மூத்த வன்பினன் விழியிடந்து" (கா. இரு பத் தெண். 300.)

163. பாளிதம் - பாற்சோறு; தொல். உயிர்மயங்கு. சூ. 43, ந. அக் காரம் - சருக்கரை. மெத்து - நிரம்பிய.

164. விராய் - கலந்து. போக்கு - குற்றம். வெற்ற அமுது - சுத்தான் னம்; இதனைப் பெருந்திருவமுதென்பர். கருனை - பொரிக்கறி.

165. பாகு துவையல் பலவறைய லாதிகளும்
பாகமுற வூறும் பலகாயும் - மாகமுஞ்சென்

166. ருர்கடிய நோலை யடைநெய்க் களிமிதவை
வார் கழையின் பாகு மணற்பாகு - சீர்கலவும்

167. சிற்றுண்டி பற்பலவுந் தேநீ ரிளநீர்வார்
உற்ற கழைநீ ருறுநீர்மோர் - பொற்ற

168. பலகனியின் சாறுநறும் பாறயிர்தேன் மற்றும்
கலவு மருளாற் கரந்தொட் - டிலகு

169. கலங்கழித்துக் கைபூசிக் காமர் கவுளின்
அலங்குபஞ்ச வாச மடுத்துத் - துலங்குபட்டின்

170. ஆனன நீவி யரும்புகைபஃ றீபவகை
ஊனமினீ ருடி யொளிர் கவிகை - பானிறத்த

171. சாமரை யாலவட்டஞ் சாந்தாற்றி பற்பலவும்
ஏம முறவினிது கொண்டருளி - நான்மறையும்

---

163 - 5. தயிரும் அக்காரமும் பயறும் கடுகும் புளியும் பிறவும் விரவி வேறு வேறாக அமைத்த அமுதுகள்; என்றது தயிரன்னம் முதலியவற்றை. நெய்யும் அக்காரமும் விரவிய அமுது - சருக்கரைப் பொங்கல்; இஃது அக்காரடலையென வழங்கும். பாகு - குழம்பு. வறையல் - வறுத்தவைகள்; வறுவலென மருவி வழங்கும். ஊறும்பலகாய் - ஊறுகாய்.

166. கடிய - மணமுள்ள. நோலை - எள்ளுருண்டை; எட்கசி வென்பர், பு. வெ. உரையாசிரியர். நெய்க்களி - நெய்விரவிய களி. மிதவை - கூழ். கழையின் பாகு - தேம்பாகு. கலவும் - கலக்கும்.

167. தேநீர் - பானகம்; தேம் - தித்திப்பு. கழைநீர் - கருப்பஞ்சாறு. பொற்ற - பொலிவுபெற்ற.

168. கரந்தொட்டு - அமுது செய்தருளி.

169. கலம் - உண்கலங்களை. கைபூசி - கைகழுவி. கவுள் - கன்னம். பஞ்சவாசம் - கிராம்பு, ஏலம், பச்சைக்கருப்பூரம், சாதிக்காய், தக்கோலமென்பன.

170. ஆனனம் நீவி - முகத்தைத் துடைத்து. பஃறீபம் - பல்தீபம். நீறு ஆடி - திருநீறும் கண்ணாடியும். பால் நிறத்த - வெள்ளை நிறத்தை யுடைய.

171. ஆலவட்டம் = தாலவிருத்தம் - பனைமடலால் வட்டமாகச் செய்த விசிறி. சாந்தாற்றி - பூசிய சந்தனத்தின் ஈரத்தை உலர்த்தும் ஒருவகை விசிறி; 180. ஏமம் - இன்பம்.

172. அன்பர் தொடுத்த வருந்துதியும் பல்லியமும்
முன்பு தொடங்க முறையாற்கேட் - டின்பக்

173. குலமுருக்கொண் டாலன்ன கோதையர்நேர் நேரே
கலவி நடமாடல் கண்டு - சுலவியெழும்

174. கற்பூர தீபமெதிர் கண்டெடுத்தோர் யாவர்க்கும்
பொற்பூரு நீறு புரிந்தருளி - அற்பூரும்

## நிலாச்சடை நிமலன் உலாப்போ தருதல்

175. காமன் குடைக்குக் கலைநிரப்புஞ் சென்னிமதி
வாமக் கலைகண் மலிந்தெழுந்து - சேமக்

176. குளிர்நிரப்பிற் றென்னக் குருமணிகால் யாத்த
ஒளிநிரப்பும் வெண்கவிகை யோங்கத் - துளிநிரப்பிக்

177. கங்கை நதியைக் கரந்த பெரும்பகையால்
துங்கக் கடற்றலைவன் றூண்டுதலும் - பொங்கிப்

178. பொரவெழுந்த வெண்டரங்கம் போன்மெனவெப் பாலும்
சுரர்மகிழ்ந்த சாமரைக டுள்ள - வருதரங்கம்

179. கண்டு பொரனுமக்குக் காரியமன் றென்றாக்கம்
கொண்டு விலக்குங் குறிப்பேபோல் - ஒண்டரளம்

180. சுற்றி னமுத்திச் சுடர்விரிக்குஞ் சாந்தாற்றி
பொற்றமணி யாலவட்டம் போந்தசைய - வெற்றி

---

172. அருந்துதி - தேவார முதலியவை.

173. கோதையர் - உருத்திரகணிகையர். கலவி - கலந்து. சுலவி - சுற்றி.

174. நீறு புரிந்தருளி - விபூதியை விரும்பியளித்து. அற்பு - அன்பு.

175. வாமம் - அழகு. சேமம் - இன்பம்.

176. குருமணி - முத்து. கால்யாத்த - பதித்த.

175 - 6. மதி நிரப்பிற்றென்னவெனக் கூட்டுக.

177. கரந்த - சடையில் ஒளித்த. கடற்றலைவன் - வருணன்; 197.

178. பொர - போர்செய்தற்கு. சாமரைகளுக்குக் கடலலைகள் உவமை. போன்மென - ஒக்குமென்று சொல்லும்படி.

179. பொரல் - போர்செய்தல்.

180. சுற்றின் - சுற்றுப்புறத்தில்.

181. விருது பலமுழங்க வெண்சங்க மார்ப்ப
இருபுறமுந் தாரை யிரங்கக் - கருவிநிறை

182. பாவலர்க ளுவலர்கள் பல்கவிதை யேத்தெடுப்பப்
பாவலர்க டங்கள் பணிசெய்யக் - காவலர்கள்

183. நீதி பிறழாமை நின்றே வலரேவல்
ஆதி நடத்தி யருகுவரப் - போதுசொரிந்

184. தாவலங் கொட்டி யடியார் குலங்களிப்ப
நாவலந் தீவு நனிசிறப்பப் - பூவலயம்

185. மெத்திய வெய்யோன் விழுக்கிரணம் பாவாமல்
நித்தில வூர்தி நிழல்செய்ய - நித்திலத்த

186. மாலைக் கவிகை மழகதிரோ னேர்கவிகை
சாலக் கதிர்க்குந் தனிப்பிச்சம் - கோலக்

187. கொடிநிரையும் பல்காடு கூர்ந்தவென வாலக்
கடிநிரைத்த காவணத்தி னின்றும் - நெடிதெழுந்து

188. பல்லுறுப்பு முற்றிப் பசும்பொன் குயின்றமணி
அல்லிறுக்குங் கோயி லகத்துலாய்ச் - செல்லிறுக்கும்

---

181. விருது - வெற்றியைப் புலப்படுத்தும் பேரி முதலியவை. தாரை - ஊதும் வாத்தியங்களுள் ஒருவகை.

181 - 2. கருவி நிறைபாவலர் - யாழ்வாசிப்போர் ; கருவி - யாழ் ; " கருவி மாக்கள் " (பு. வெ. 31.) நாவலர் - பிரசங்கம் செய்வோர். பாவலர்கள் - கவிஞர். காவலர்கள் - அரசர்.

183. ஏவலர் ஏவல் ஆதி - கோயிற்பணி செய்வோர்களை ஏவுதல் முதலியவற்றை.

184. ஆவலங் கொட்டல் - வாயைப் பொத்திக்கொண்டு ஆரவாரித்தல் ; " ஆனதங் கைவாய் சேர்த்தி யாவலங் கொட்டி யார்த்தார் " (வி. பா. நிவாதகவச. 95.)

185 - 6. நித்திலவூர்தி - முத்துப்பந்தர் ; 'நீந்து நித்திலவூர்தி - மாந்தர்நெருக்கத்தைக் கடந்து போகின்ற முத்தின்பந்தர்' (சீவக. 858, ந.) நித்திலத்த மாலைக்கவிகை - வெண்குடை. மழகதிரோன் - பாலசூரியன். மழகதிரோன் நேர்கவிகை - சிவப்புக்குடை. கதிர்க்கும் - ஒளியைவீசும் பிச்சம் - மயிலிறகாற் செய்த குடை.

187. கூர்ந்த - மிக்கன. ஆல - அசைய. கடி - வாசனையையுடைய பொருள்கள். காவணம் - பந்தர். (பி - ம்.) 'வெனவாரக்', 'வென வார்ப்பக்'

188. முற்றி - முற்றுப்பெற்று. அல் இறுக்கும் - இருளை அழியச் செய்யும். உலாய் - உலாவி. செல்இறுக்கும் - மேகம் தங்கும்.

189. கோபுர வாயிற் குழாங்கண் டுளங்களிப்ப
மாபுர வீதி மருங்கெய்தி - ஆபுரத்தில்

190. ஏவுற்ற பொற்சிலைநே ரெய்துவதோ வென்னநனி
மூவுற்ற செம்பொன் முழுத்தேரில் - பூவுற்ற

191. சிங்கத் தவிசிற் றிகழ்ந்தேறி யைங்கரன்முன்
துங்கக் குலத்தேர் துனைந்தூர - மங்கையுமை

192. நன்னர்க் கடம்ப னவையில் விறற்சண்டன்
பின்னர்ப் பொலந்தேர் பெரிதூர - முன்னர்

193. வரத்தி னருள்பெற்ற மத்தளமா யோன்றன்
கரத்தினனி யொத்திக் களிப்ப - நரைத்தலையோன்

194. தாளம் பிடிக்கத் தனிவிசும்பு காவலோன்
வாளம் பிடித்து மருங்கணைய - வேளம்

195. பிடித்தறியார் செங்கைதிரை யீந்து தனதன்
பொடித்தநறும் பாகடைப்பை பூணக் - கடித்தேன்

196. துளிமலர்மெல் வாசந் துதைந்துகுளிர் கொண்டு
வளியிளங்கா லாய்மருங்கு வாவ - நளிகொள்

197. தனிநீர்க் கடற்றலைவன் சார்ந்திறைவர் மெய்யில்
பனிநீர்த் திவலை பனிப்பக் - கனிதே

---

189 - 90. மா புரம் - பெரிய நகரம். ஆ: வியப்பின்கட் குறிப்பிடைச் சொல். புரத்தில் - முப்புரங்களோடு போர்செய்கையில். ஏவு - அம்பு. பொற்சிலை - வில்லாகியமேருமலை. மூ உற்ற - மூத்தலுற்ற. தேருக்கு மேரு உவமை.

191. சிங்கத்தவிசு - சிங்காதனம். துனைந்து - விரைந்து. ஐங்கரன் முன்னூரவென இயைக்க.

192. கடம்பன் - முருகக்கடவுள். சண்டன் - சண்டேசர்.

193. மத்தளமாயோன் : கண்ணி, 58 - 9, குறிப்பைப்பார்க்க. நரைத்தலையோன் - பிரமன்.

194 - 5. வாளம் - கத்தி. வேள் அம்பு இடித்தறியார் - பரமசிவன். திரை - வெற்றிலைச்சுருள். தனதன் - குபேரன். பாகு - பாக்கு. அடைப்பை - வெற்றிலைப்பை.

196. தென்றற்குரிய சைத்தியம், சௌரப்பியம், மாந்தியமென்னும் மூன்று நடையும் இதிற் கூறப்பட்டன. நளி - பெருமை, குளிர்ச்சி.

197. கடற்றலைவன் - வருணன்.

198. மதுபருக்கம் பான்மற்றும் வந்தடியா ருய்ப்பக்
கதுமென வெய்யோன் கனலி - விதுமூவர்

199. சுத்தி புரிந்து துணைக்கை யிடையேந்தி
அத்த நுகர்கென் றளித்துவர - எத்திசையும்

200. போற்றுயரீ சானன் புனிதனருள் பெற்றெய்தி
ஏற்றுமிசை யேற்றுக் கொடியுயர்ப்ப - ஆற்றுபணி

201. நீக்கிக் கழியு நிலையினரை நன்னெறியில்
தாக்கி யியமன் றலைநிறுவப் - போக்கின்றி

202. மற்றை யமரர்களு மாநகரி ளுட்சியரும்
உற்ற தொழின்மை யுஞற்றிவர - முற்றும்

203. இரவுபகல் காட்டு மெறுழுருளை மான்றேர்
வரதன் மணிவீதி வந்தான் - புரவளிக்கும்

204. அத்திர சாலை யமுதடு சாலையா
வைத்த தனிச்சே வகன்வந்தான் - பைத்தமணி

205. நாகமு நீள்கோட்டு நாகமுஞ் சூழ்ந்திருப்ப
மாகரும் போற்றுமுடை யான்வந்தான் - ஆகும்

---

198. மதுபருக்கம் - பால் பழம் சருக்கரை நெய் கலந்தமைத்த ஒரு வகையுணவு; "கொங்கலர் மாலை சூட்டிக் குளிர்மது பருக்க மூட்டி" (திருவிளை. 12 : 47.) வெய்யோன் - சூரியன். கனலி - அக்கினி. விது - சந்திரன். (பி - ம்.) 'மதுபக்கம்'

199. அத்த : விளி.

200. ஈசானன் இடபக்கொடியை உயர்த்த. பணி - கைங்கரியங்கள்.

201. நிறுவ - நிறுத்த. போக்கு - குற்றம்.

202. உஞற்றி - செய்து.

203. இரவையும் பகலையும் காட்டும் உருளை என்றது சந்திர சூரியராகிய சக்கரங்களை. புரவு - பாதுகாத்தல்.

204. பாற்கடல், திருமால் துயிலுதற்கும் விடமுண்டாதற்கும் இடமாக இருந்ததுபற்றி அத்திரசாலையெனவும் அமுதடுசாலையெனவும் கூறப்பட்டது. அத்திரசாலையை அமுதடுசாலையாக வைத்த; அத்திரமென்றது திருமாலை. பைத்த - படம் விரித்த.

204 - 5. மணி நாகம் - திசையிலுள்ள எட்டுப் பாம்புகள். கோட்டு நாகம் - திக்குயானைகள்; கோடு - கொம்பு. உடையென்றது இங்கே திக்கை. திக்கே சிவபெருமானுக்கு உடை யென்பதைத் திகம்பரனென்னும் திருநாமத்தாலுமுணர்க.

206. பரிசமுருக் காண்டல் பகர்கேள்வி யோர்பால்
மருவுமணிப் பூணினுன் வந்தான் - பரவை

207. அலேத்தும் புவிபெயர்த்திட் டந்தரத் தோங்கி
மலேத்த விடைக்கொடியான் வந்தான் - நிலேத்த

208. கடவுளர்தம் மாதர் களம்வறங்கூ ராது
மிடல்படைத்த நன்மிடற்றுன் வந்தான் - படர்கருமம்

209. ஈட்டா ருயிர்விழிக ளெல்லா முருக்காணக்
காட்டாகு முக்கண்ணி ஞன்வந்தான் - வேட்டதருள்

210. ஆனந்த ருத்திரத்தெம் மண்ணல்வந்தா னென்ருேதை
வானுந்து சின்ன மலிந்தூத - ஞான

211. உறுவ ருவவும் பனவ ருவவும்
மறைக ளொலியின் மலியச் - செறியும்

212. மதலே நிரையின் வரிசை யெனத்திண்
மதமைக் களிறு மருவப் - பிதிரும்

---

206. பரிசம் - ஸ்பரிசம். பரிசத்தையும் காண்டலேயும் கேட்டலேயும் ஒருறுப்பிற் பெற்ற பூணென்றது நாகத்தை ; "கண்ணுறப்பன் மொழிகேட்கு மணிப்பூணேய்" (திருவானேக்கா. கடவுள். 9) என்பர்.

206 - 7. பரவையை அலேத்தலும், புவியைப் பெயர்த்தலும், விண்ணில் ஓங்கி நிற்றலும் திருமாலின்செயல் ; விடை திருமால் ஆதலால் இங்ஙனங் கூறினர்.

208. களம் - கழுத்து. வறம் - வறுமை. சிவபெருமான் நஞ்சையுண்டருளினமையின், விண்ணேர்கள் பிழைத்தனர். களம்வறங்கூராமை - கண்டம் மாங்கலியத்தோடு கூடியிருத்தல். கருமம் - நல்விணை தீவிணைகளே.

209. ஈட்டும் ஆருயிர்கள். முக்கண்ணினுன் : சோமசூரியாக்கினிகள் கண்களாக இருத்தலின் இவ்வாறு கூறினர் ; "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவர்" (திருச்சிற். 14.) வேட்டது - விரும்பியதை.

209 - 10. வேட்டதருள்......அண்ணல் : "வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்" (தே. திருநா.) ஓதை - ஓசை. சின்னம் - ஊதப்படும் வாத்தியங்களுள் ஒன்று.

211. உறுவர் - முனிவர். உவவு - கடல். பனவர் - பிராமணர்.

212. மதலே - மரக்கலம். களிற்றுக்கு மரக்கலம் உவமை. மைக்களிறு - மைபூசியகளிறு ; "மையணி யானே மறப்போர்ச் செழியன்" (அகநா. 116 : 13.)

213. திரையி னிரைக டிரள்வ தெனப்பல்
பரியி னிரைகள் படரப் - பெரிய

214. பகடு கடவிப் பரவு மரையர்
மகுட நிரைகள் வயங்கப் - புகரில்

215. கடவுண் மகளிர் கலவி முறையின்
நடன வகைக ணவிலப் - படகம்

216. பதலை முருடு பணவ முழவம்
முதல பலவு முழங்க - மதிவெல்

217. வளைகள் குழல்கள் வயிர்க ணரம்பின்
கிளைக ளினிது கிளர - ஒளிசெய்

218. மடல்கொ டருவின் மலரி னமரர்
படியிற் றிடறு படுப்ப - அடியர்

219. உதவு கனக மழையொ டுதவும்
உதக மதனை யொழிப்ப - மதவொண்

220. பொழில்கண் மழைகள் பொருவ தெனப்பொன்
செழிபன் மணிகள் சிதறப் - பொழியும்

221. கனிகள் கழையின் றுணிகள் பொரிகள்
சனமெய்த் தலையிற் றதையக் - கனக




---

213. திரையின் நிரைகள் - அலையின் வரிசைகள். பரிகளுக்குத் திரையின் நிரைகள் உவமை. "பொங்குந் திரையும் பொருகடலும்...... வெம்பரியும், போர்க்களமும் போலும் பொலிந்து" (**கிளவித்தெளிவு**); "பரி நிரை திரையாய்த் துள்ள" (**திருவிளை.** 5 : 16.)

214. பகடு - யானை. அரையர் - அரசர்.

215. கலவி - கலந்து ; கண்ணி, 173.

215 - 6. படக முதலிய ஐந்தும் வாத்திய விசேடங்கள். மதி - சந்திரனை. வெல் : உவமவுருபு.

217. வளைகள் - சங்குகள். வயிர்கள் - ஊதுகொம்புகள். நரம்பின் கிளைகள் - யாழின் வகைகள் ; நரம்பு : ஆகுபெயர்.

218. மடல் - பூவிதழ். திடறு - திடல், மேடு ; "திடரேட்டம்" (**கம்ப.** குலமுறை. 8.)

219. உதகம் - தாரைவார்க்கும் நீர். அதனை - அத்திடரை. மத - அழகு ; **தொல்.** உரி. சூ. 80.

221. கழையின் துணிகள் - கருப்பந்துண்டங்கள். பொரிகள் நெற்

222. தருவுங் கொடியுந் ததையப் பதண
நிரையு மெவரு நெருங்க - விரவு
223 மனிதர் குலமு மலர்வ தெனப்பல்
புனித மரமும் பொலிய - இனிய
224. புகைவிண் பொதியப் பொழிசெங் கிரணப்
பகல்செ லிரவிற் பயில - நிகழும்
225. இருளை யிழையி னொளியு மிரத
உருவி னொளியு மொறுப்பத் - தரையின்

## மிடைதரு மகளிர் அடைவுறு நிலைமை

226. வணங்கிடை மங்கையர் வண்ட லிகந்து
சுணங்கிவர் கொங்கை துளங்க - இணங்கி
227. மணந்தவழ் தொங்கன் மணந்து குழன்று
வணர்ந்து சுரிந்து மலிந்து - தணிந்து
228. பொருந்தள கங்கள் சரிந்து சரிந்து
வெரிந்தலை யொன்றி விளங்கப் - பரந்து
229. நெருங்கிய கொங்கை நிலந்திவள் வம்பு
மருங்கொளி யுந்து வடங்கள் - ஒருங்கு

---

பொரிகள். சனம் மெய்த்தலையில் - மனிதர்களுடைய உடம்பினிடத்தே. ததைய - நெருங்க.

221 - 2. கனகதரு - கற்பக தரு. கொடி - காமவல்லி. பதணம் - மதிலுள் மேடை.

223. மனிதர்கள் மரங்களின் மேல் ஏறி நிற்கின்றமையின் இங்ஙனம் கூறினர்.

223 - 4. இனியபுகை - நறும்புகை. பகல் செல் இரவில் - சூரியன் அத்தமித்த இரவைப்போல. புகை பொதிதலாற் பகல் இரவு போன்றது.

225. உரு - வடிவம். இருளை ஆபரணங்களின் ஒளியும் தேரினொளியும் நீக்க.

226. வண்டல் இகந்து - விளையாட்டை விட்டு. சுணங்கு இவர் - தேமல் பரந்த.

227. தொங்கல் - மாலை. குழன்று - கடை வளைந்து. வணர்ந்து - வளைந்த. சுரிந்து - சுழித்து.

228. அளகங்கள் - கூந்தல்கள். வெரிந்தலை - முதுகினிடத்தே.

229. நிலம் - இடம். திவள்வம்பு - விளங்குகின்ற கச்சு. உந்துதல் - செலுத்துதல்.

230. செழுந்தொடை யொன்றனொ டொன்று செறிந்து
விழுந்து தவழ்ந்து விலங்க - எழுந்து

231. பணிந்த நிதம்ப மணிந்த வடங்கள்
பிணைந்து தழங்கல் பிறங்க - நிணந்து

232. கிடந்த சிலம்பு சதங்கை கிளர்ந்து
நுடங்கிடை நொந்தது நொந்த - திடங்கண்

233. டிருந்தெழு கென்று விளம்புவ தென்னத்
திருந்தடி நின்று சிலம்ப - விரைந்து

234. நடந்து தொடர்ந்து நனந்தலை ஞெள்ளல்
மிடைந்து சனங்கள் விலங்கப் - படர்ந்து

235. புகுந்தெதிர் நின்று பொழிந்தலர் செங்கை
முகிழ்ந்து சிரங்கொடு முந்தி - நெகிழ்ந்த

236. உளங்கொ டிறைஞ்சி யுவந்து நிமிர்ந்து
துளங்கி மருங்கு துவன்ற - வளங்கொள்

237. விசும்பர மங்கையர் விண்ணிட மெங்கும்
அசைந்தலர் சிந்தி யணங்கக் - கசிந்தெவரும்

238. போற்ற நெடுங்கொடியும் பூந்தோ ரணத்திரளும்
தோற்றிய மாடந் தொறுந்திபம் - ஏற்றிநறும்

239. பூரண கும்பம் பொருத்திநறு நீர்தெளித்துக்
காரணவ வோங்குநடைக் காவணமிட் - டேரணவும்

---

230. தொடை - பூமாலை.

231. வடங்கள் - மேகலை வகைகள். பிணைந்து - பின்னி. தழங்கல்- ஒலித்தல். நிணந்து - பிணித்து.

232. சிலம்பு சதங்கை - சிலம்பும் சதங்கையும். இடம் கண்டு - தங்கு மிடத்தை யறிந்து ; சமயமறிந்தெனலுமாம்.

234. நனந்தலை - அகற்சியையுடைய இடம். ஞெள்ளல் - தெரு. விலங்க - விலக, குறுக்கிட. படர்ந்து - சென்று.

235. அலர் பொழிந்து. முகிழ்ந்து - குவித்து. மங்கையர் (226) துவன்ற (236) என்க.

237. அரமங்கையர் - தெய்வப்பெண்கள். அணங்க - வருந்த.

239. நறுநீர் - பனிநீர். கார் அணவ - மேகமண்டலத்தைப் பொருந்த. நடைக்காவணம் - வழியில் நீளமாகப் போடப்படும் பந்தல்; இக்காலத்து இச்சொல் நடைவானமென்று வழங்கும். ஏர் அணவும் - அழகுபொருந்திய.

## நேசத் தலைவி ஈசனைக் காண்டல்

240. வீதி யிடைக்கடவி வெய்தெதிரே தோற்றுதலும்
போதுமட மாதரொடு போந்தேனும் - நாதன்

241. கருணை பொழிமுகமுங் காதலெலாம் வல்லே
அருள வலர்ந்த விழியும் - பருதிபல

242. கோடி யொருங்கு குழீஇயனைய செக்கரொளி
நீடு முருவினிறை கோலமும் - பீடும்

243. மழுமான் றரித்து வயங்குமிரு கையும்
முழுவான் பயத்தை முனிந்து - செழுவான்

244. வரம்வழங்க வைத்த மலர்ந்தவிரு கையும்
பரம்வழங்கு பாதத் துணையும் - உரங்கிடந்த

245. கேழில் பிரணவம்போற் கேசரங்கொண் டேமலர்ந்த
கேழிதழித் தாரின் கெழுதகையும் - வாழிநனி

246. கண்டேன் புரிமுறைமை காணேன் கதழ்வினுளம்
விண்டேன் விதும்பி மெலிந்தனேன் - தண்டாப்

---

240. கடவி - செலுத்தி. வெய்து - விரைவாக. போதும் - சென்ற. போந்தேனென்றது தலைவியின் கூற்று.

241. வல்லே - விரைவாக.

242. குழீஇ அனைய - கூடினலொத்த. பீடு - பெருமை.

243. வான்பயம் - பெரிய அச்சம்.

243 - 4. அபயக்கையும் வரதக்கையும். பரம் - முத்தி. உரம் - மார்பு.

245. கேழ் இல் - ஒப்பில்லாத. கேசரம் - பூவினுள்ளேயுள்ள பொற் கம்பி போன்ற வளைந்த உறுப்பு. கேழ் - நிறம். இதழி - கொன்றை. கெழுதகை - உரிமை.

244 - 5. உரங்கிடந்த இதழித்தார்: "வண்ண மார்பிற் றருங் கொன்றை" (புறநா. கடவுள். 2.) கொன்றையை இவ்வாறே பின்னுங் கூறுவர்; 352 - 3.

246. புரிமுறைமை - செய்யுங் கடமைகளை. கதழ்வின் - விரைவில். (பி - ம்.) 'வெதும்பி'

247. புகுமுகம்யான் வீழப் பொழிகருணை காட்டி
நகுநயமு நல்கினு னேனும் - தொகுதவத்துள்

248. ஏது குறையுளதோ வெம்பெருமான் முன்கருதும்
தீதி றிருவிளையாட் டோவறியேன் - மாதவற்குச்

## மயலுறுந் தலைவி செயலழிந் தியம்பல்

249. சங்காழி முன்னிங்குத் தந்தாரென் பார்கவர்ந்த
சங்காழி யென்கைத் தரவிரையார் - இங்கே

250. கலையொருவர்க் குய்த்தளித்தா ரென்பார் பறித்த
கலையெனக்கு நல்கக் கடுகார் - விலகவிங்கு

251. வேகவதி நீர்தடுத்தா ரென்பா ரெனதுவிழி
வேகவதி நீரை விலக்கிலார் - மாகளங்க

---

247. புகுமுகம் யான்வீழ - புகு முகத்தை யான் விரும்ப; புகு முகம் - தலைவன் நோக்கத்திற்குத் தான் எதிர்ப்படுதல்; "அணங்கு மாயிடைப் புகு முகம் புரிந்தே யார்வ மீக்கொளக் கட்கடைவிடுத்தாள்" (கா. பன்னிரு. 136.) நகுநயம் - புன்முறுவலை; தொல். மெய்ப். சூ. 13, பார்க்க. (பி - ம்.) 'புகு முகம் யானவிழப்'

248. மாதவற்கு - திருமாலுக்கு.

249. சங்கு - சங்கம், வளையல். ஆழி - சக்கரம், மோதிரம். இத் தலத்தில் திருமால் பரமசிவனிடத்துச் சங்கத்தையும் சக்கரத்தையும் பெற்ற னர்; கா. வலம்புரி. 45; ஷை. திருமாற். 12-3.

250. கலை - வித்தை, ஆடை. ஒருவர் - அகத்தியமுனிவர்; அவருக் குக் கலையளித்தனர்; கா. தழுவ. 245-6. கடுகார் - விரையார்.

251. வேகவதி - ஓராறு; பிரமன்செய்த யாகத்தை அழித்தற்கு வந்த அவ்வாற்று வெள்ளத்தைத் திருமாலைக் கொண்டு தடுப்பித்தார்; கா. ஆதிபதீச. சிவாத்தான. விழி வேக வதி நீரை - கண்கள் வேகும்படி உள்ளே தங்கிப் பெருகுகின்ற கண்ணீரை; துயரக் கண்ணீர் வெம்மையை யுடையது; "மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற, புள்ளி வெம்பனி", "கருந்தடங் கண்ணி னிமைதீர் வெம்பனி", "வடுப்போழ்ந் தன்ன வாளரி நெடுங்கண், குமிழ்த்தெழு வெம்பனி", "தண்டா மரைக்கண் வெம்பனி வீழ", "ஓடரி சிதரிய வொள்ளரி மழைக்கண்.........உருத்தரி வெம்பனி யூழூழ் சிதறி", "உள்ளழல் வெம்பனி யுகுத்தரு கண்ணீர்த், துன்பமோ டிறைஞ்சிய தம்பியர்", "கண்ணி, னழறிரண் டன்ன வாவி", "தம்பியர் தாமரைத்

252. மேனிப் பசப்பரிக்கு வீத்தாரென் பாரெனது
மேனிப் பசப்பரிக்க மேவிலார் - ஊனவிட

253. வெப்பொழிய விண்டுவைத்தம் பானிறுவி னுரெனது
வெப்பொழியப் பானிறுவ மேவிலார் - ஒப்பனையாட்

254 காகங் குழைந்தா ரளியேன்றன் பாற்குறுகும்
ஆகங் குழையு மருளிலார் - சாகரத்தைத்

255 தாக்கியன்று காஞ்சி தனைக்காத்தா ரின்றுமது
தாக்கியெனைக் காப்பத் தயவிலார் - ஒக்கியசெங்

256. கல்லெறிக்குத் தம்பாதங் காணிகொடுத் தாரென்கண்
நல்லெறிக்குத் தந்திணிதோ ணல்கிலார் - வல்லி

257. அறமுழுது மாக்க வமைத்தாரிக் காம
அறமொன்றுந் தாமாக்க வண்ணுர் - உறுவெப்புக்

---

தடங்கண் சொரியும், வெம்பனி துடைத்து" (பெருங். க. 33 : 123-4, 40 : 191-2, 46 : 223-4 ; 2. 10 : 124, 16 : 16-20 ; 3. 24 : 101-2, 103-4, 126-7); "இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி" (குறுந். 4 : 2); "தனத்துக் கமைந்தகண் வெங்நீர்க் குளியும்" (மயிலையந். 60); "வெதும்பி விழும் நீள ரிக் கண்ணீர்" (393) என்பர் பின்னும்; "கணவ ரெய்தாப், புலம்பறு மாத ரார்க்கும் புணர்விழி வெங்நீ ராட்டி" (கா. கழுவாய். 371.)

252. பசப்பு - பச்சைநிறத்தை. அரிக்கு - திருமாலுக்கு; கா. வீராட்ட. 25 - 6 ; ஷை அந்தரு. 41.

252 - 3. விடவெப்பு - விடத்தா லுண்டான வெம்மையானது. விண்டு வைத் தம்பால் நிறுவினர் - திருமாலைத் தம்முடைய பக்கத்தே நிறுத்தினர் ; கா. கண்ணீச. 4-9, அந்தரு. 42-3. ஒப்பனையாட்கு - உமாதேவியார்க்கு.

254. ஆகம் - உடம்பு, நெஞ்சு. குழையும் - மெலியாநிற்கும். உமைக்குத் திருமேனி குழைந்தனர் ; கா. தழுவ.

254 - 5. சாகரத்தை - கடலை. காஞ்சிதனை - காஞ்சிபுரத்தை. கடல் பொங்கி யெழுந்து வந்தபொழுது காளியைக்கொண்டு அதனை அடக்கு வித்தார் ; "காளிக்குப் பொங்குகட லுக்கும் பொலிவளித்தார்" (408) என்பர் பின்னும் ; கா. கழுவாய். 418-21. ஒக்கிய - ஓங்கியெறிந்த. (பி - ம்.) 'தயையிலார்'

256. கல்லெறிக்கு - சாக்கிய நாயனுரெறிந்த கல்லெறிக்கு; கா. முத்தீச. 17. கண் நல்லெறி - கண்களின் நல்லபார்வை. வல்லி - உமாதேவியார்.

257. அறமுழுதும் - முப்பத்திரண்டு தருமங்களையும் ; காமவறம் அம்

258. கண்ணனுக்கிங் கானந்தங் காட்டினுர் காதலித்தேற்
கெண்ணனுக்கு மானந்த மேய்த்திலார் - கண்ணனயன்

259. பூமகளிர் தம்மைப் புணரவளித் தாரிங்கிப்
பூமகளே ளனத்தாம் புணர்கிலார் - தோமிலாக்

260. காப்பு நடனமிங்குக் கைக்கொண்டா ரென்னுவி
காப்பவுளஞ் சற்றுங் கடைப்பிடியார் - யாப்பு

261. மறைபுறத்தே செல்லாமை மீட்டுவளர்த் தாரென்
மறைபுறத்தே செல்லாமை வையார் - குறுகொருவன்

262. புண்ணுருவ மாற்றிப் புரவளித்தா ரிங்கெனது
புண்ணுளத்தை மாற்றிப் புரவளியார் - எண்ணில்

263. இடர்துமித்தன் மூத்தபிள்ளைக் கேய்த்தா ரெனக்கோர்
இடர்துமிக்கத் தாமிங் கிசையார் - படருமிரு

264. மாலாரைத் தம்முருவா வைகுவித்தா ரிங்கடுத்த
மாலேனைத் தம்முருவா வைகுவியார் - மாலோ

---

முப்பத்திரண்டனுள் ஒன்று; கண்ணி, 50-51; கா. தழுவ. 137-41; கழு வாய். 238-70.

257 - 8. வெப்புக் கண்ணனுக்கு - சுராக்கனென்னும் அசுரனுக்கு. ஆனந்தம் - மரணம், முத்தி, இன்பம்; கா. சுரகரீச. 39. எண் அனுக்கும் - அளவைக் கடந்த. கண்ணனயன் - கண்ணனும் அயனும்.

259. பூமகளிர் தம்மை - திருமகளையும் கலைமகளையும். பூமகளேனை - பூமியிலுள்ள மகளாகிய என்னை.

260. காப்பு நடனம் - ரக்ஷாநடனம்; கா. தழுவ. 300 - 312. என் ஆவிகாப்ப - என்னுயிரைக்காத்தற்கு. யாப்பு - செய்யுட்களுக்குரிய பந்தம்.

261. மறை - வேதம். வேதத்தைக் கைக்கொண்டு சென்ற சோமுகாசுரனைத் திருமாலைக்கொண்டு கொல்லுவித்து அவ்வேதத்தைக் கொண்டுவரச் செய்து வளர்த்தார்; கா. மச்சீச. என் மறை - எனது மந்தணச் செய்திகள்.

261 - 2. புரவு - பாதுகாப்பு. உச்சயினி நகரத்திலிருந்த ஒருவனுக்கு உண்டாகிய குட்டவியாதிப் புண்ணை இட்ட சித்தித்தீர்த்தம் நீக்கிய தென்பார். கா. தீர்த்த. 75 - 95.

263. மூத்தபிள்ளைக்கு - விநாயகருக்கு; கா. வலம்புரி. 14.

263 - 4. இருமாலாரை - இரண்டு திருமால் வடிவங்களை. தம் முருவம் - சிவலிங்கவடிவம்; கா. திருமேற். 9 - 10; அந்தரு. 35, பார்க்க.

265. டலருடையா னைத்தோ ளணைத்தார்மா லோடிங்
கலருடையே னைத்தோ ளணையார் - குலவுகற்ப

## வீறுறு தலைவிதன் வேறுபா டுரைத்தல்

266. காலத்துங் காஞ்சி யழியாமை காட்டினரிக்
காலத்தென் காஞ்சிதனைக் கட்டழித்தார் - கோலத்தம்

267. கைப்பட்ட மென்றுரும்பாற் காமருவிண் ணோர்தூண்டு
மொய்ப்பட்ட வெம்படைகண் மொத்தினார் - மெய்ப்பட்ட

268. வெல்லுருவ முற்றும் விராய்ச்சிறைத்த வென்னுள்ள
வல்லிரும்பைப் பூவின் மலக்கினார் - வெல்லெரியின்

269. மூவ ருடல்குளிர்ப்ப முன்னினார் தண்மதிக்கென்
ஓவி லுயிர் வெதும்ப வுன்னினார் - மேவுதலும்

270. பொய்யழிய வேதவியா சன்மையல் போக்கினார்
மெய்யழிய வென்கண்மயல் வீக்கினார் - வெய்யவுறு

---

திருமால் சிவலிங்கப் பெருமானாகியபொழுது ஓதவுருகிய பெருமானெனப் படுவரென்பர்; ப. கா. சிவாலய. 270. மாலேனை - மயக்கமுடைய என்னை.

264 - 5. திருமாலையும் பிரமனையும் தோளில் அணைத்தனர்; கா. காரோணப். மாலோடு அலருடையேனை - மயக்கத்தையும் பழிமொழியையும் உடைய என்னை.

265 - 6. கற்பகாலத்திலும் காஞ்சிநகரம் அழியாதிருக்கும்படி செய்வித்தனர்; இதனாற் காஞ்சிநகரத்திற்குப் பிரளயசித்தென்று ஒரு பெயருண்டு; கா. கழுவாய். 227. என் காஞ்சிதனை - எனது காஞ்சியென்னும் ஆபரணத்தை.

267. மொய் - வலி. ஒரு துரும்பினால் தேவர்களுடைய ஆயுதங்களை அடக்கினார்; அமரிசம் (64) என்பதன் குறிப்பைப்பார்க்க.

268. விராய் - கலந்து. பூவின் மலக்கினார் - மன்மதபாணத்தால் மயக்கச் செய்தார். மலக்கு: மலங்கு என்பதன் பிறவினை; "செம்மலங் கயல்கள் செங்கமலத்தண் பூமலங்க வெதிர்பாய்வன" (பெரிய. தடுத்தாட். 92); "மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடி" (நள. சுயம்வர.)

269. மூவர் - திரிபுரத்துத் தலைவர்களான மூன்றசுரர்; கா. முப்புராரி கோட்டப்.

270. மையல் - மயக்கம். மெய் அழிய - என் உடம்புகெட. வேதவியாசன் மையல்போக்கியதை, கா. சார்ந்தாசயப் படலத்தாலறியலாகும்.

271. சாப மவரவர்க்குச் சாய்த்தார் கழையாய்
சாப மெனக்குத் தகவைத்தார் - கோப

272. மகர வலிதொலைத்தா ரம்மகர மைந்தன்
மகர வலிவளர வைத்தார் - புகழுவையம்

273. சுத்தி யொருதடத்துத் தோற்றினார் யான்சுத்தி
முத்த மிகழு முறைவைத்தார் - ஒத்த

274. அயிரா பதத்தி னருள்வைத்தார் யாரும்
அயிரா பதத்தினருள் வையார் - அய்ராமைப்

275. பாலுததி யோர்முனிக்குப் பாலித்தா ரிங்கெனக்குப்
பாலுணவு வேண்டாப் பகைசெய்தார் - சால

276. இரவு தமக்குரிமை யாக்கினா ரென்பால்
இரவிகல்வ தாக விசைத்தார் - பரவும்

277. அதிசயித்த வைந்தடத்தோ டாருமெனை யெண்ணி
அதிசயித்த வாறுதட மென்ன - வதனூர

---

271. சாபம் - பிருகுமுனிவர் முதலியோருடைய சாபங்களை. கழையாய சாபம் - கரும்பாகியவில்.

272. மகரவலி - திருமாலாகிய மகரமீனின் வலியை. அம்மகர மைந்தன் - மன்மதனுடைய. மகரவலி - மீனக்கொடியின் வலியை; கண்ணி, 292 - 3; கா. மச்சீச. வையம் புகழ.

273. சுத்தி - சிப்பி; "சுத்தி - பிறர்க்குத் திருநீறு கொடுத்தற்கு இப்பி வடிவாகத் தலையோட்டா னமைக்கப்படுவ தொன்று" (திருச்சிற். 242, பேர்.) ஒருதடம் - சிப்பி தீர்த்தம்; கா. மச்சீச. 2.

274. அயிராபதம் - வெள்ளையானை; கா. அரிசாப. 23. அயிர் ஆப தத்தின் - சந்தேகிக்கும் ஆபத்தில்.

275. ஓர்முனிக்கு - உபமன்னியு முனிவர்க்கு; இவருக்குப் பாற்கட லளித்தனர்; கா. தான்றோன்றீச. 3 - 12. பாலுணவு வேண்டாமை பசியட நிற்றலென்னும் மெய்ப்பாட்டின் பாற்படும்.

276. தமக்கு இரவை உரிமையாக்கினார்; இரவு - யாசகம், இராத்திரி.

277. ஐந்தடம் - இரவில் தாமரை பூக்குந் தடம் முதலிய ஐந்து; 19 - ஆம் கண்ணி முதலியவற்றைப் பார்க்க.

278. விந்தம் விழிக்குவளை மென்முகையும் பூவிரிவும்
அந்தி பகலுமுற வாக்கினுர் - இந்தமுறைக்

279. கோட்டிபுரி கின்ருர்முன் கோதற்ற நூன்முறையின்
வேட்டடியிற் பூசை விளைத்துவரம் - ஈட்டியநற்

## அருளுவ ரோவேன் றவள் ஐயுறுதல்

280. காமனை யிங்குக் கடிவரோ பூசைபுரி
சோமனைக் காதத் துணிவரோ - பூமலியக்

281. காலிறைவன் றூவிக் களித்தலான் மெல்லவரும்
காலினை யிங்கே கழிப்பரோ - கோலவிமிற்

282. சேவினிது பூசைபுரி செய்கையான் மற்றிங்குச்
சேவின் மணியைச் சிதர்ப்பரோ - பூவியப்ப

283. ஆண்பெண்மை யாக்கினு ரப்பெண்ணை வாழன்றில்
மாண்பின்மை யாக மதிப்பரோ - காண்பினிய

---

277 - 8. வதனமாகிய தாமரையும் கண்ணுகிய குவளையும் இரண்டு காலத்தும் முறையே குவிந்தும் விரிந்துமே இருக்கின்றன வென்பது இவற்றின் கருத்து ; என்றது பொலிவற்ற முகமும் துயிலற்ற விழியும் உடையேனயினேனென்றபடி.

279. கோட்டி - துன்பம் ; "சிறிய, மங்கைதனைக் கோட்டி கொளல் வல்லமையோ" (தமிழ்விடு. 256.) நூல் - ஆகமநூல். அடி - திருவடி.

280. காமனை - மன்மதனை. காமன் பூசித்தது : காமீசம் (கண்ணி, 65) என்பதன் குறிப்பைப் பார்க்க. சோமன் - சந்திரன். சோமன் பூசித்தது : சோமீசம் (66) என்பதன் குறிப்பைப் பார்க்க.

280 - 81. காலிறைவன் - வாயுதேவன். மலியப்பூவைத் தூவி. வாயு பூசித்தது : செவ்வந்தீசம் (59) என்பதன் குறிப்பைப் பார்க்க. மெல்ல வரும் காலினை - தென்றலை. இமில் - விடையின் முதுகிலுள்ள ஒருவகைப் புடைப்பு.

282. சே - ரிஷபம். இடபம் பூசித்துப் பேறுபெற்றது ; கா. தழுவ. 105 - 7. சேவின்மணி - ஏற்றின் மணியை. பூ - பூமி.

283. ஆண்பெண்மை ஆக்கினுர் - ஆண்பனையைப் பெண்பனையாகச் செய்வித்தார். ஆக்கிய இடம் திருவோத்தூர். ஓத்தூர் (73) என்பதன் குறிப்பைப் பார்க்க. அப்பெண்ணை - அந்தப்பனையில் ; அ : நெஞ்சறிசுட்டு. பனைமரம் அன்றிற்குரியது. காண்பு - காணுதற்கு. இக்கண்ணியோடு, "மன்றிற் பனைவடிவ மாற்றினு யப்பனைமே, லன்றிற்புள் வேறொருபுள் ளாக்காயோ" (தமிழ்விடு. 162) என்பது ஒப்பு நோக்கற்பாலது. (பி - ம்.) 'காண்பினறு'

284. மாவடியின் வாழ்க்கை மருவினு ரம்மாவிற்
கூவு குயிலைக் குமைப்பரோ - ஆவதிவண்

285. என்னேயென் றெண்ணத் திரங்கினே னங்ஙனே
கொன்னே யுறுதி குறிக்கொண்டேன் - முன்னே

## அருள்புரி குவரேன் றவள் உளம் துணிதல்

286. அரிதாழ்ந் தயனோ டளிப்பவுல கேத்தி
அரியோ டுலகயனு மீன்றுன் - கருடன்

287. இகலோ டரவலைத்தா னேத்தியர வேத்திச்
சுகமே கருடவெனச் சொற்ற - திகவின்

288. றிரணியன்பூ சிப்பவர மீந்தார்பூ சித்த
நரமடங்க ருக்க நயந்தார் - பரவியொரு

---

284. மா அடியில் - மாமரத்தடியில். மாமரம் குயிற்குரியது; 'மாங் குயில்' என்பது வழக்கு.

286. அரி தாழ்ந்து அயனோடு உலகு அளிப்ப - அரிவணங்கி அயனை யும் உலகையும் அளிக்க; புண்ணிய கோடீசம் (66) என்பதன் குறிப்பைப் பார்க்க. அயனும் ஏத்தி அரியோடு உலகை ஈன்றுன்; சிவாத்தானம் (61 - 2) என்பதன் குறிப்பைப் பார்க்க.

286 - 7. கருடன் ஏத்தி அரவு அலைத்தான் - கருடன் பூசித்துப் பாம்பை வருத்தினன்; முத்தீசம் (67) என்பதன் குறிப்பைப் பார்க்க. அரவு ஏத்திச் சொற்றது; அரவு அருள்பெற்றது; பணாதரீசம் (68 - 9) என்பதன் குறிப்பைப் பார்க்க; 'ஏன் கருடா சுகமா?' என்பது ஒரு பழமொழியாக வும் வழங்குகின்றது; "பன்ன கங்களை யணியெனத் தாங்கி னன்பன்னகா பரணன்ற, னின்னருட்பெறு மதுகையான் மற்றவை யெங்தைபா லரி யோடும், துன்னு வெம்பகைக் கலுழனைக் கலுழனே சுகங்கொலென் றஞ் சாமே, பன்னி மேன்மையின் வினவின விம்மொழி பாரெலா மெடுத்தோ தும்" (கா. பணாதரீச. 5); "பலியேல், கடவுளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே, படர்சிறைய புள்ளரசைப் பார்த்து" (நன்னெறி, 9.) இகவு இன்று - பிரிவில்லாமல்.

288. இரணியன் பூசித்து வரம் பெற்றனன்; ஆடகேசம் (64) என்ப தன் குறிப்பைப் பார்க்க. நரமடங்கல் - நரசிங்கம். தாக்க - இரணியனை வருத்த. நரமடங்கல் தாக்க வரம் பெற்றது; நாரசிங்கீசம் (71) என்பதன் குறிப்பைப் பார்க்க.

289. வாணன்பூ சிப்பநொச்சி வாயில்காத் தார்நேமிப்
பாணிபூ சிப்பவவன் பாடழித்தார் - மாணவரம்

290. அந்தகன் பூசைக் களித்தா ரவனையொரு
மைந்தனைவிட் டாருயிரை வாங்கினுர் - மைந்து

291. சலந்தரன்பூ சிப்பத் தகவளித்தார் தாமே
சலந்தகவன் னுனுயிரைச் சாய்த்தார் - வலந்தொழுத

292. கச்சபத்துக் கீந்தார் கடலலைப்ப வைங்கரற்கு
வெச்சென த் தாக்கும் விடைகொடுத்தார் - மச்சம்

293. நயக்கவர மீந்தார் நவைகண்டு வாட்கண்
புயக்கவொரு மைந்தனைப்போ வித்தார் - வியக்கவரம்

---

289. வாணன் - வாணுசுரன். நொச்சி - மதில். வாணன் பூசித்து வாயில் காக்க வரம்பெற்றனன் ; வாணீசம் (68) என்பதன் குறிப்பைப் பார்க்க. நேமிப்பாணி - சக்கரபாணியாகிய திருமால். அவன்பாடு - அந்த வாணுசுரன் பெருமையை. திருமால் வாணனை வென்றனர் ; கா. வாணீசப். 75 - 6.

290. அந்தகன் - அந்தகாசுரன். அந்தகன் பூசைக்கு வரமளித்தார் ; அந்தகேசம் (68) என்பதன் குறிப்பைப் பார்க்க. ஒரு மைந்தனை - வைரவக் கடவுளை. வைரவக்கடவுள் அந்தகனைத் தடிந்தனர் ; கா. அந்தகேசப். 28 - 30.

290 - 91. மைந்து - வலியை. சலந்தரன் - சலந்தராசுரன். சலந்ரன் பூசித்து வலிபெற்றனன் ; சலந்தரேசம் (98) என்பதன் குறிப்பைப் பார்க்க. சலம் தக - தணியாக் கோபம் பொருந்த. அன்னுன் - சலந்தராசுரன். சலந்தரனைச் சிவபிரான் தடிந்தனர் ; கா. சலந்தரீசப். 23.

291 - 2. வலம் ஈந்தார் - வெற்றியை ஈந்தார். கச்சபம் - அவதார கூர்மம். கச்சபம் தொழ வலம் ஈந்தனர் ; கச்சபேசம் (63) என்பதன் குறிப்பைப் பார்க்க. ஐங்கரற்கு - விநாயகக் கடவுளுக்கு. வெச்சென - விரைவாக. தாக்கும் - கூர்மத்தைத் தாக்கும். விநாயகக் கடவுள் கச்சபத்தை வென்றனர் ; கா. கச்சபேச. 5 - 6. மச்சம் - அவதார மீனம்.

292 - 3. மச்சம் நயக்க வரம் ஈந்தனர் : மச்சநாதம் (72) என்பதன் குறிப்பைப் பார்க்க. நவைகண்டு - அதன் குற்றத்தைக்கண்டு. புயக்க - பெயர்க்க; "புயக்கரிதோ வுலகமெனுஞ் சேற்றிடைப்போயழுந்தியபுல் லறிவை யம்மா" (ஆனந்த. பதிற். 6) ; இச்சொல்லின் பகுதி புய்யென்று

294. வன்றிக் களித்தார் மறலமருப் புப்பறித்தல்
வென்றிக் குமரற்கு மேவித்தார் - ஒன்றுவரம்

295. வாமன னுக் கீந்தார் வயக்கவயந் தண்டவனோர்
மாமகனுக் காக மகிழ்சிறந்தார் - நாம

296. நரமடங்கல் போற்றவர நல்கினுர் மைந்தன்
சரபமெனத் தாக்கமகிழ் சார்ந்தார் - விரகவர்பால்

297. இவ்வா றிருத்தலா லெண்ணி லடுத்தயர்ப்பின்
ஒவ்வாது சேட்படுத லுண்மையால் - எவ்வாறும்

298. தீங்குபுரி மாரன் செழுந்திங்க ளாதியொரீஇப்
பாங்கெனக்கு நல்கப் படர்வரே - ஈங்கென்றும்

299. இட்டசித்தி நாத ரெனவிருப்பார் மற்றெனக்கும்
இட்டசித்தி யாக்க விசைவரே - விட்டவொரு

---

பழைய நூல்களிற் காணப்படுகிறது. ஒருமகன் - ஐயனர். போவித்தார் - செலுத்தினுர்; "போவிப்பம்" (நல்வழி.)

293 - 4. வன்றி - அவதார வராகம்; வன்றி - பன்றி; "வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ, வன்றி படர்ந்த வழி" (தொல். களவு. சூ. 11, ந. மேற்.) வரம் அளித்தார். வரம் அளித்தது: வராகபுரம் (65 - 6) என்பதன் குறிப்பைப் பார்க்க. மயல - விரோதிப்ப. மருப்பு - அந்த வராகத்தின் கொம்பை. குமரற்கு - முருகக் கடவுளுக்கு. மேவித்தார் - மேவுவித்தார்; இடைக்குறை. ஒன்றுவரம் - ஒருவரத்தை; "ஒன்று தேரினல்" (சீவக. 417.)

295. வாமன னுக்கு வரம் ஈந்தனர்; அபிராமேச்சுரம் (61) என்பதன் குறிப்பைப் பார்க்க. அவன் கவசமும் தண்டமுமாக. மாமகன் - பைரவர். (பி - ம்.) 'அவனோர்'

296. நரமடங்கல் - நரசிங்கம். மைந்தன் - வீரபத்திரக் கடவுள். நரமடங்கலுக்கு வரம் நல்கினர்; நாரசிங்கீச்சுரம் (71) என்பதன் குறிப்பைப் பார்க்க. நரமடங்கலை வீரபத்திரர் வென்றனர். விரகு - தந்திரம்.

297. சேட்படுதல் - நெடுந்தூரமாதல். தியானிப்பவர்களை அடுத்தலும் மறந்தவர்களைவிட்டு நீங்கியே போதலும் இறைவனுக்கு இயல்பு.

298. ஒரீஇ - நீக்கி. பாங்கு - இன்பம். படர்வர் - நினைப்பார்; வருவாரெனலுமாம்.

299. இட்டசித்தி - ஒருதலம்; 66 - 7. இட்டசித்தி ஆக்க - விருப்பத்தை நிறைவேற்ற.

300. பூவுக்குங் கண்வாங்கும் புண்ணியனூர் நொந்தவென
தாவிக்குங் காவ லமைப்பரே - மேவியிங்குப்

301. பன்னாளும் வைகும் பயனுற்றம் மோடொன்ரு
எந்நாளும் வாழ்க்கை யிசைப்பரே - பன்னாளும்

## என்பிழை காணுர் என்றவள் கூறல்

302. தீதிரண்டி னுனுமிங்குச் செய்திருந்தே னுயிடினும்
தீதெவர்க்கு மிங்குத் திருப்பணியாய் - மேதகுமா

303. ருக்குவார் தம்மையுளத் தாக்கு மளியேற்கும்
ஆக்கி யணைய வமைவரே - போக்கென்

304. றறியாப் பருவத் தடிபிழைத்தே னேனும்
பிறியாக் கருணைப் பெருமான் - குறியாத

305. தக்கனிங்குச் சாரத் தவறு தவிர்த்தவற்கு
மிக்க தலைமை விளைத்திட்டார் - தொக்கதமக்

306. கன்பரைப் பாழ்மதத்தி லாழ்த்தினோர் நண்ணுதலும்
கொன்பெரும் பாவங் குறைத்திட்டார் - முன்பிருவர்

---

299 - 300. விட்ட ஒரு பூவுக்கும் - அருச்சனையில் விடுபட்ட ஒரு தாமரைப்பூவுக்கு ஈடாக. கண் - திருமால் விழியை. இங்கே கூறப்பட்ட செய்தி திருமாற்பேறு என்னுந்தலத்தில் நடைபெற்றது ; 59. இங்கு - இக் காஞ்சித்தலத்தில். (பி . ம்.) ' பூவுக்குக்கண் '

301. காஞ்சியில் வைகுவோர் சிவத்தோடொன்றுவரென்பது புராண வரலாறு.

302. இரண்டு - புத்தி பூர்வம், அபுத்தி பூர்வம். தீதினைச் செய்திருந்தே னுயிடினு மெனக் கூட்டுக ; '' மறந்து மறம்பிறழாக் காஞ்சி வளம்பதியின், அறிந்துசெய் தீவினையு மன்றி யெழுந்தனவும், பிறிந்து தவப்பயனென் றெண்ணில வாய்ப்பெருகி, அறம்பொரு ளின்பமெலாமாகவு நீயருள் வாய்'' (கா. தழுவ. 415.)

303. போக்கு - குற்றம்.

304. பிறியா - பிரியாத.

305. தம்மை நீக்கி யாகஞ் செய்த குற்றத்தைப் போக்கித் தக்கனுக்கு அருள் செய்தனர் ; தக்கேசம் (96) என்பதைப் பார்க்க.

306. பாழ்மதத்தில் - பௌத்த மதத்தில். ஆழ்த்தினோர் - திருமாலும் நாரதரும் ; கயிலாயம் (64) என்பதைப் பார்க்க. கொன் - அச்சம். இருவர் - அயனும் அரியும்.

307. யான்முதன்மை யான்முதன்மை யென்றிகந்தா ரெய்துதலும்
தான்முதன்மை யென்னத் தவறழித்தார் - பான்மை

308. திரிந்தொட் டகவடிவாய்ச் சேர்சனற்கு மாரற்
கரிந்துபிழை யெவ்வரமு மார்த்தார் - பிரிந்தவுளத்

309. தாழிகடைந் துங்கடுவை யாரக் கொடுத்துமுற்ற
பீழையம ரர்க்குப் பிரித்திட்டார் - வாழிமுன்னர்த்

310. தக்கனொடு கூடித் தவறிழைத்த விண்ணோர்கள்
தொக்கடைய நன்மைச் சுரப்பளித்தார் - மிக்கமர்த்த

311. வாளவுணர்த் தாம்வெல்ல யாம்வென்று மென்றிகலி
ஆளமரர் சார வருள்கொழித்தார் - தோளிணைகள்

312. கண்டுதி நீவ வறைகூவுங் காழவுணன்
தொண்டூற மீட்டுநலந் தோற்றினர் - பண்டேவல்

313. கண்டூ றுவணற்குக் காட்டாப் பிழையண்மி
விண்டேறு வாழவருள் வீக்கினர் - வண்டூதும்

---

306-7. இகந்தார் - வரம்பு கடந்தார். பான்மை - தன்மை. இருவர் இகந்தாராய் எய்தத் தவறழித்தார். மாலிங்கம் (70) என்பதன் குறிப்பைப் பார்க்க.

308. பிழை அரிந்து - பிழையை நீக்கி. ஆர்த்தார் - நிரப்பினர். பிரிந்த - தம்மை மறந்த.

307-8. சனற்குமாரற்கு ஒட்டகவடிவத்தைமாற்றினர்; கா. சனற்குமார.

309. கடுவை - விடத்தை. பீழை - குற்றம். இக்கதையின் விரிவை மணிகண்டேச்சுரம் (66) என்பதன் குறிப்பிற் பார்க்க. வாழி : அசைநிலை.

310. தொக்கு அடைய - கூடிவர. தக்கனுடனிருந்த பாவத்தைத் தேவர்களுக்குப் போக்கி யருளினர்; கா. தக்கேச. 72-6.

311. அவுணர்த்தாம் வெல்ல - அசுரரைத்தாம் (தேவர்) வெல்ல; அமரேசம் (64) என்பதன் குறிப்பைப்பார்க்க.

312. கண்டுதி நீவ - தினவைப் போக்க. அறைகூவும் - போர் செய்தற் கழைத்த. காழ் அவுணன் - குற்றத்தையுடைய வாணசுரன். தொண்டு ஊற - பணிவிடைகளை மிக்குச் செய்ய; வாணீசம் (68) என்பதன் குறிப்பைப் பார்க்க.

312-3. உவணற்கு - திருமாலின் ஊர்தியாகிய கருடனுக்கு. ஊறு காட்டாப்பிழை அண்மி - இடையூற்றைச் செய்யாத குற்றம் முதலிற்

314. தேங்கடப்பந் தாரான் றிருவருளி னேவலினை
நீங்கி யணையவரு ணீடினார் - ஓங்கல்

315. மகள்வாள் விழிபுதைத்து வந்தடிமை செய்யத்
தகவாள் கலப்புத் தரித்தார் - இகவாத

316. இத்தகைமை மிக்கார்மற் றென்னையுந் தண்ணருளின்
வைத்தடிமை கொள்ள மதிப்பரென - ஒத்தெழுந்தேன்

317. தூதொருவர்க் காகத் துணிந்தார் தமையடுத்த
தூது வறிதாகச் சூழ்கலார் - ஆதலினால்

318. தூதுவிடிற் பாணித்தல் சூழா ரெனத்துணிந்தேன்
போதுநெகிழ்த் தூதும் பொறிவண்டே - தாதளாய்ப்

## களித்துறு வண்டை விளித்துப் புகழ்தல்

319. பில்குமது வுண்ணும் பிரமரமே மென்மலரின்
மல்கு மமளி மதுகரமே - நல்குமிசைக்

---

செறியப்பட்டு. கட்டளையின்றி ஊறுசெய்தமையாற் குற்றத்தை இடபதேவர் அடைந்தனர். விண்டு - அக்குற்றத்தினின்றும் நீங்கி. தம்முடைய ஏவலா லன்றிக் கருடனை வருத்திய குற்றத்தை இடபதேவருக்குப் போக்கி யருளினர்; இடபதேவர் வழிபட்ட ஸ்தலம் இடபேசுவரமெனப்படும்; கா. தழுவ. 87 - 107.

314. கடப்பந்தாரான் - முருகக் கடவுள். ஏவல் - பிரமதேவரைச் சிறையினின்றும் நீக்கும்படி இட்ட கட்டளை; சேனபதீச்சுரம் (74) என்பதன் குறிப்பைப் பார்க்க.

314 - 5. ஓங்கல் மகள் - உமாதேவியார். ஆள்கலப்பு - ஆளுங்கலப்பு; கா. தழுவ. (பி-ம்.) 'தகவான் கலப்பு'

316. 'என்னையும்' என்பது தலைவி தன்னைச் சுட்டிக் கூறியது.

317. ஒருவர்க்கு - சுந்தர மூர்த்தி நாயனார்க்கு. ஒருவர்க்குத் தூதாக விரைந்து சென்றவர் தம்பால் வந்த தூது வீணே மீண்டு செல்ல நினையார்.

318. பாணித்தல் - தாமதித்தல். சூழார் - கருதார். நெகிழ்த்து - நெகிழச் செய்து. போது நெகிழ்த்தூதும் பொறிவண்டு: "புதலும் வரிவண் டூதவாய்நெகிழ்ந் தனவே" (குறுந். 260 : 1 - 2.) தாது அளாய் - பூந்தாதுக் களைக் கலந்து.

319. பிரமரம், மதுகரம் - வண்டு. அமளி - படுக்கை. (பி-ம்.) 'மென் மலரா'

320. கானம் பயிலுங் கருஞ்சுரும்பே பூஞ்சோலைத்
தானம் பயிலுந் தகைஞிமிறே - மானமிகு

321. சிம்புளுக்கு மஞ்சாத் திறலரியே சீறிவரும்
வெம்பரிக்கு மஞ்சா விறற்றும்பி - வெம்புலிகள்

322. தாக்குதற் கஞ்சாத் தனிமாவே குட்டிதழீஇ
ஊக்குதல்செய் யாத வுயர்மந்தி - ஏக்குலங்கள்

323. தாங்கி யுகையாத சாகமே வில்லுதைப்பத்
தீங்கு புரியாச் சிலீமுகமே - ஓங்குரிமை

## பிறபொருள் தூதிற் சிறவா வென்றல்

324. நெஞ்சத்தைத் தூண்டுவோ மென்னி னெடுவீதி
மஞ்சன் மணித்தேர் மருங்கெய்தி - என்செய்தி

325. கேட்கவெனத் தாழ்ந்து கிளப்ப முயன்றுபல்கால்
மீட்கப் பதமின்மை மேவலால் - தாட்கமலம்

---

320. கானம் - இசைப்பாட்டு. தானம் - இடம். ஞிமிறு - வண்டு.

321. சிம்புள் - சரபப் பறவை; இது சிங்கத்தை வெல்லும் ஆற்றலை யுடையது. அரி - வண்டு; சிங்கமென்பது மற்றொரு பொருள். வெம்பு அரிக்கும் - கோபிக்கின்ற சிங்கத்திற்கும்; அரி - சிங்கம். தும்பி - வண்டு. சிங்கத்திற்கும் அஞ்சாத யானையே யென்பது மற்றொரு பொருள்.

321 - 2. மா - வண்டு, குதிரை. குதிரை புலிக்கு அஞ்சும் இயல்பினது. குட்டிதழீஇ - குட்டியை மார்பில் தழுவிக்கொண்டு. ஊக்குதல் - தாவுதல்; "மகவுடை மந்திபோல, வகனுறத் தழீஇ" (குறுந். 29 : 6 - 7.) மந்தி - வண்டு, குரங்கு. ஏக்குலங்கள் - பாணத்தொகுதிகளை.

323. உகையாத - செலுத்தாத. சாகம் - வண்டு, வில்; "**சாகம்** பொன்வரை யாகத் தானவர் மும்மதில் சாயவெய்து" (தே. திருக்கச்சியே கம்பம்.) சிலீமுகம் - வண்டு, அம்பு; "சாகஞ் சிலீமுகமுஞ் சார்ந்தன்றே" (371) என்பர்பின்.

324. தூதாக அனுப்பப்படும் பொருள்களுள் நெஞ்சு ஒன்று. மஞ்சன் - சிவபெருமான்; "தோணிபுரமேய **மஞ்சனை**", "கோட்டாற்றின் **மஞ்சனே** மணியே", "**மஞ்சனே** மணியுமானாய்" (தே.)

325. கேட்க என - கேட்டருள்கவென்று விண்ணப்பஞ்செய்து. தாழ்ந்து - தாமதித்து; வணங்கி யெனலுமாம்.

326. கண்டுகொண்டே யண்ணல் கவின்வீதி தோறுமுலாக்
கொண்டருளிக் கோயில் குறுகிமணி - மண்டும்

327. உவளகத்திற் செல்ல வுடன்சென்ற தாங்கும்
இவறியது கூறவிட மின்றிக் - கவலுவதே

328. போலுமத னுலின்னும் போந்ததில்லை போந்திடினும்
மாலுவது மீட்டும் வழங்காதே - சாலவிங்கு

329. நன்றுறுத்தப் போத னயந்தாலும் பல்புலனும்
சென்றுசென்று பற்றுதலுஞ் செய்யுமே - மன்றவங்கே

330. பூண்டபெருங் காரியத்தைப் பொச்சாத் தலுங்கூடும்
மாண்டதன்று தூதுக்கு மற்றதுதான் - காண்டகைய

331. அன்னத்தைத் தூண்டின் மறையன்ன மன்ருெருபொய்
சொன்ன பிழையாற் ருெருமன்னம் - என்னவும்

332. நம்பர் திருவுள்ள நாடுவன வல்லவன்றிக்
கொம்பனையாட் கன்னக் குருகன்றே - நம்பலுறும்

---

325 - 6. பதம் - சமயம். தாள் கமலம் கண்டு கொண்டே - திருவடித் தாமரை மலர்களைத் தரிசித்துக் கொண்டே. மலரைக்கண்டு மகிழ்வது வண்டின் இயற்கை.

327. உவளகம் - திருப்பள்ளியறை. செல்ல - சிவபெருமான் எழுந்தருள. இவறியது - சொல்ல விரும்பிய செய்தியை. இடம் - சமயம்.

327 - 8. கவலுவதே போலும் - கவலை யடைந்தது போலே தோற்றுகின்றது. போந்தது இல்லை - வரவில்லை. போந்திடினும் - வந்தாலும். மாலுவது - மயங்குவதாகும். வழங்காது - செல்லாது.

329. போதலை நயந்தாலும். பல்புலன் - சத்தமுதலியவற்றை; பல இடங்களிலுமென்பது மற்ருெரு பொருள். மன்ற - நிச்சயமாக. (பி-ம்.) 'போதநயந்தாலும்'

330. பொச்சாத்தல் - மறத்தல், சோரவிடுதல். அது தூதுக்கு மாண்டதன்று - அம்மனம் தூதுசெல்லுதற்கு மாட்சிமையுடையதன்று. மற்று, தான்: அசை நிலைகள்.

331. அன்னத்தை - அன்னப் பறவையை. மறையன்னம் - பிரமதேவராகிய அன்னம். பொய் - பரமசிவன் திருமுடியைக் கண்டதாகக் கூறிய பொய்ச் சொல்லை. "ஒண்கமலத், தன்னந் தனை விடுப்பேனன்னந்தா னக்கவரை, இன்னந்தான் கண்டறியா தென்பரே" (106 - 7) என்பது தமிழ்விடுதூது. அன்னம் என்னவும் - எவ்வகை அன்னப் பறவைகளும்.

332. நம்பர் - சிவபெருமான், கொம்பனையாட்கு - பூங்கொம்பை

333. ஊர்தி யஃதிதனை யுய்த்தறியின் முற்றுமை
சார்வது முண்டு தகவன்றே - சீர்வதியும்

334. கிள்ளையைத் தூண்டிக் கிளந்தவலா லங்குரைக்குக்
கொள்ளக் கிளவாத கொள்கைத்தே - ஒள்ளிழையாள்

335. கைக்கிள்ளை யிக்கிள்ளை காணினுங் காரியந்தான்
பொய்க்கு மதுவும் பொருந்தாதே - மெய்க்குமொரு

336. பூவையைப் போக்கிலது போநெறியிற் கண்டோர்கள்
மேவினர் பற்றின் விடுதியின்றே - மேவவொரு

337. நன்புறவைத் தூண்டினது நாளுந்தூ துண்டொழிக்கும்
என்புறத்துத் தூதாக வெண்ணுமே - துன்பறியா

338. அன்றில்குயி றென்ற லவைவிடின்மா ருப்பகையாய்
ஒன்றுவன தூதா யுதவுமே - அன்றியுங்கேள்

---

ஒத்த உமாதேவியாருக்கு. அன்னக்குருகன்றே - அன்னப்பறவை யன்றோ.

333. ஊர்தி - வாகனமாகும். அஃது - அந்த அன்னமானது. இதனை - யான்விடும் அன்னத்தை. உய்த்து அறியின் - ஆராய்ந்து வினவி அறியுமாயின். முற்றுமை - காரியம் முடியாமை.

334 - 5. ஒள்ளிழையாள் - உமாதேவியாருடைய. உமாதேவியாரின் திருக்கரத்தில் கிளியிருத்தல் : "நங்கழ லடுத்தவர்க ணன்மையிது போலத், தங்குவர்க ளென்றுழை தரித்தவரொ டொப்பப், பைங்கிளியை யங்கைகொடு பண்ணுரை பயிற்றும், குங்கும சவுந்தரிதன் கோலநினை வாமால்" (பூவாளூர்ப். கடவுள். 4); "கதங்கொ ணீலிகைக் கிள்ளை" (தக்க. 608); "களங்கனி யென்றுமை கைக்கிளி பார்க்குங் கறைக் கண்டனே" (காசிக். 61.) குளி யான் கூறியதையே கூறு நிற்கும். உரைக்கு - வினவிற்கு. பொய்க்கும் - முடிவு பெறாது. அதுவும் - அக்கிளியும். மெய்க்கும் - மெச்சப்படும்.

336. பூவையை - நாகணவாய்ப்புள்ளை. மேவினர் - விரும்பி ; முற்றெச்சம். விடுதி - விடப்படுதல்.

337. புறவை - புறாவை. நாளும் - தினந்தோறும். தூது - பருக்கைக் கல் ; "ஒண்டுதை யுண்புறவீர்" (மறைசை 25); தௌத்தியமென்பது மற்றொரு பொருள்.

338. அன்றிற் பறவையும் குயிலும் தென்றலும். பகையாயொன்றுவன - எனக்குப் பகையாக இருப்பவை. கேள் - கேட்பாயாக.

339. எண்காற்புள் ளானூர்க் கிருகாற்பு ளெவ்வெவையும்
கண்காணுந் தூதாங் கடனிலவே - ஒண்காரைத்

340. தூண்டி னதன்செலவு சூழ்ந்துவரப் பாணித்தல்
வேண்டுமத னுற்பிழையே மேவுமே - ஊண்டிகழும்

341. காருவரி சொல்லோ கடுங்குரல் வாய்திறப்பின்
ஆரழலே சிந்து மவையன்றிச் - சீரரையன்

342. வாகனமா யன்னுன் வழியேவ லாற்றுவது
வேக வளியெதிரின் மீள்வதே - போகவது

343. செந்தமிழைச் செம்பொன்னைச் சேர்ப்பினவை தாஞ்செல்லா
பந்த முறக்கொடுபோம் பாலவே - முந்துய்த்தும்

344. வேற்றொருவர் வாய்திறக்க வேண்டுமே யென்செய்கை
வேற்றொருவர் காணு விதியதே - கோற்றொடிக்கைப்

345. பாங்கிமுத லோரைப் படர்விக்கப் பல்வழியும்
ஈங்கெனக்குச் சற்று மிசைவின்றே - ஈங்குரைத்த

---

339. எண்காற் புள்ளானூர்க்கு - எட்டுக் கால்களையுடைய சரபப் புள் வடிவங்கொண்ட பரமசிவனுக்கு. இருகாற்புள் - மேற்கூறிய அன்னம் முதலியன. தூதாங்கடன் - தூதாதற்குரிய முறைமை. காரை - மேகத்தை.

340 - 41. செலவு - செல்லுதல். சூழ்ந்து - சுற்றி. (பி -ம்.) 'சூழ்ந் துலாப்' பாணித்தல் வேண்டும் - தாமதித்தல் வேண்டும். ஊண் உவரி - மேகத்தின் உணவு உவர்ப்பையுடைய கடல். கடுங்குரலென்றது இடியை ; அதன் சொல் இடி. அழலென்றது மின்னலை ; "கருங்கொண்மூ வாய் திறந்த மின்னு" (நாலடி. 8.) அரையன் - அரசன் ; என்றது இந்திரனை.

342. வளி - காற்று. அதுபோக - அதுகிடக்க.

339 - 42. மேகத்தாற் பயனில்லையென்றபடி.

343. செந்தமிழையும் செம்பொன்னையும்.சேர்ப்பின் - தூதாகவிடின் அவை தாமே செல்லா ; பிறர்கொண்டு போகும் இயல்பையுடையனவென்ற படி. பந்தம் - தமிழுக்குத்தளையும் பொன்னுக்கு முடிப்புமாம். முந்து உய்த்தும் - திருமுன்பு சேர்ப்பித்தாலும்.

தமிழ்தூதாக விடப்படுமென்பது மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடு தூதாலும் பொன் தூதாக விடப்படுதல் பலவகைப்பட்ட பணவிடு தூதுகளாலும் அறியப்படும்.

345. படர்விக்க - விடுக்க. பல்வழியும் - பலவிதத்தாலும். இசைவு - உடன்பாடு. பாங்கியை அனுப்புதலில் தலைவிக்கு இசைவு இன்மையின்

346. பல்வகைய தூதும் பதனறிந்து சேய்நின்று
சொல்வகையி னன்றித் துணிபொருளை - நல்குவகை

## அரியே தூதிற் குரிய தென்றல்

347. காட்டுவன வல்லவே கண்ணிய பூங்கடுக்கைத்
தோட்டலர்த் தாரிற் றுணிந்தேறி - வேட்டதிது

348. நல்கெனமுன் னத்தி நவின்றருளி நாதனுர்
செல்கென மீள்வதுநின் செய்கையே - புல்குதவம்

349. ஆற்றி மறையு மரவு மதியுமற்றும்
ஏற்ற மிகுமணியா யேய்ந்திருக்கும் - நீற்றர்

350. திருவுருவின் மீது திகழ்தெய்வத் தாரில்
மருவுதவ நீவளரா யேனும் - ஒருவிலுயிர்

---

காரணம், "எதற்காகத் தூதர சன்புடை யேகி யிளங்கொடி நீ, அற்கா ரளகங் குலேயமெய் வேர்வை யரும்பவந்தோ, பற்கா யமுகநகத்துறு நனி யுறப் பட்டுநொந்தாய், நிற்கா முறைசெய்கைம் மாறுமுண்டோவிந்த நீணிலத்தே" என்ற வஞ்சப்புகழ்ச்சியணிச் செய்யுளாலும் உணரப்படும்.

346. பதன் அறிந்து - சமயம் தெரிந்து. சேய்நின்று - தூரமான இடத்தில் நின்று. துணிபொருளை யென்றது மாலையை.

347. கடுக்கைத் தாரில் - கொன்றை மாலையில். வேட்டது இது - தலைவி விரும்பியது இந்த மாலையைத்தான்.

348. முன்னத்தின் - குறிப்பினுல். நவின்றருளி யென்ருள் வண்டை ஊக்குவதற்கு. செல்க என - போவென்று அவர் கட்டளையிட.

349. மறை - வேதம். அரவு - பாம்பு. மதி - சந்திரன். அணி - ஆபரணம். வேதங்கள் இத்தலத்தில் வழிபட்டு இறைவனுக்குச் சிலம்பாக அமைந்தன. அந்த இடம் வேதநூபுரமென வழங்கும்; மறைநூபுரம் (73) என்பதன் குறிப்பைப் பார்க்க. அரவு அணியானமை, பணுதரேசம் (68 - 9) என்பதன் குறிப்பாலும், சந்திரன் வழிபட்டு அணியானமை சோமேசம் (66) என்பதன் குறிப்பாலும் அறியப்படும்.

350. தெய்வத்தாரில் - கொன்றை மாலையினிடத்தே. மருவுதவம் நீ வளராயேனும் - மருவுதற்குரிய தவத்தை நீ செய்யாதிருப்பினும்; என்றது தெய்வத்தாரில் வண்டு மொய்யாது என்று குறிப்பித்தபடி.

351. ஆக்கைபொருண் மூன்று மளிக்கவென நேர்ந்தேற்கு
நீக்க மருந்துணையாய் நேர்வதே - போக்கில்

352. அரிய தவமா மகத்திடு முற்றும்
பிரணவ மாகப் பிறங்கி - விரவுமணம்

353. எண்டிசையும் போர்ப்ப விரைவரே போலுயர்வு
கொண்டநறுங் கொன்றைக் கொழுந்தாரில் - தண்டுளித்தேன்

354. தாய்மடுத்துத் தேக்கெறிந்து மன்னுகளி மிக்குளர்ந்து
தாய்மறிந்து தாதளவித் தங்குநலம் - வேய்மதித்த

355. தோளியொரு பாலார்பாற் றுன்னுமங்கே யும்பெறுவை
மீளி புரியினின்று மேவுவை - கேளளியே

---

350 - 51. உயிரும் ஆக்கையும் பொருளும்; 'உடல் பொருளாவி' என்பர். தம்முடைய உடல் முதலிய மூன்றும் அளித்தல் அடியார்களுடைய இயற்கை; "அன்றே யென்ற னுவியு முடலு முடைமையெல்லாமும், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ" (**திருவாசகம்**); "அம்பல வாண வடியே னுடன் முதலா, மருவிய மூன்றுங்கொண் டொன்றீ வதற்கு வருத்தமென்னே" (**அம்பலவாண. கலம்.**) போக்கு - குற்றம்; போதலுமாம்.

352. அகத்திடு - எண்ணம். முற்றும் - நிறைவேறும்.

348 - 52. நீ தவம் செய்யாதிருப்பினும் உடல் முதலிய மூன்றையும் இறைவனுக்கு உரிமையாக்குதற்குத் துணிந்த எனக்கு உபகாரம் செய்தலே உனக்குத் தவமாகும்.

352 - 3. கொன்றைமலர் பிரணவ வடிவமென்பது, "பிரணவத்தி னுரியபொருள் பிறரென்று பேசிடுவார், முரணவித்தற் காகமங்கண் முதலாய வேண்டுபவோ, கரணவிகற் பங்கடப்பாய் காவதமெண் ணிலகமழும், திரண்மிகுத்த செழுங்கொன்றை மாலிகைசேர் தரக்கண்டும்" (**நாகைக். புண்டரீக. முதற். 22**) என்பதனுலும், அம்மரம் சிவபெருமான் போன்ற தென்பது, "மன்றன்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார் போல், நின்றநறுங் கொன்றையினை" (**பெரிய. ஆனய. 21**) என்பதனுலும் அறியலாகும்.

354. வாய்மடுத்து - உண்டு. தேக்கெறிந்து - ஏப்பம்விட்டு; "திருந்து பெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்து" (**கா. கடவுள். 13.**) தாய் - தாவி.

354 - 5. தங்குநலம் அங்கேயும் பெறுவை. மீளி - மீளுதல்; "மீளி யுரைத்தி வினையே னுரைப்பதென் மெல்லியற்கே" (**திருச்சிற். 151.**) இங்கும் மேவுவை - இங்கும் அடைவாய். அளியே கேள் - வண்டே கேட் பாயாக.

356. தூதுவிடு வார்க டுணிந்தபொரு ளேயிசையும்
தூதுபுரி வார்க்குமெனிற் சொல்லுவதென் - நீதகவில்

357. தோற்றுதலா னின்குலத்தைத் தூய்மைபடுத் தாயதுவும்
நோற்றதே நீயதன்பா னேக்குதலின் - ஏற்றுருவாய்

358. மாயனனி தாங்கும் வரத னுருக்காணத்
தூயதிரு மேனி தொடநிகரின் - றுய

359. அருள்பெரிதுந் தாங்கநின்போ லார்பெற்றுர் பெற்றுர்
மருள்சிறிதுந் தாங்கவா ராரே - தெருளளியே

360. முன்னின்ப நின்னின்ப முற்றிய வென்னின்பம்
பின்னின்ப மன்றிப் பிறிதுண்டே - அன்னைநீ

361. ஆதற் குரிமை யடுத்தலா னிற்றூது
போதற்க ணுக்கப் புகன்றனேன் - போதுற்றி

362. வேட்ட பொழுதி னதுவாயே மேவினுய்
ஈட்டமிதன் மேலு மெனக்குண்டோ - பாட்டளியே

---

356. துணிந்த பொருளென்றது பூமாலையை. தூது புரிவார்க்கும் இசையுமெனினெனக் கூட்டுக. நீ என்றது வண்டை.

357. நீ தோன்றினமையால் உன்குலம் தூய்மையுற்றது. அதுவும் - அக்குலமும். ஏற்று உருவாய் - இடப வடிவமாய்.

358. வரதன் - பரமசிவன். காணவும் தொடவும் தாங்கவும் பெற்றுய் நீ. நிகர் இன்று ஆய - ஒப்பில்லாததாகிய.

359. பெற்றுர் வாரார். அளியே தெருள் - வண்டே தெளிவாயாக.

360 - 61. தான் விரும்பிய திருமேனி தீண்டுதல் முதலியவற்றை வண்டு முதலிற் பெறுமாதலால், 'முன்னின்பம் நின்னின்பம்' என்ருள். வயிற்றிலிருக்கும் சிசு நுகர்வதற்கு முன்பே, உணவின் சாரத்தைத் தாய் நுகர்வதனுல் அன்னை நீயாதற்கு உரிமையையுடையை என்ருள். புகன்றனேன் - விரும்பினேன். போதுற்றி - நான் விரும்பிய அச்சமயத்தில் வந்தாய்.

362. வேட்ட பொழுதின் - விரும்பிய பொழுதில்; "வேட்ட பொழுதி னவையவை போலுமே" (குறள், 1105.) ஈட்டம் - நிமித்தம்.

363. தன்பெருமை தானறியாத் தன்மையன்போல் வையகத்து
நின்பெருமை நீயு நினைகலாய் - முன்பொருநாள்

364. நின்னுருவங் கோடலா னன்றே நெடுவேலான்
முன்னிய வேத முழுதுணர்ந்தான் - நின்ன

## இலகுறு வண்டின் பலபெயர்ப் பெருமை

365. தரியெனு நாம மணிதலான் மாயன்
இரவி வலாரியிவர் முன்னோர் - பரசுகரத்

366. தானந்த ருத்திரனுக் காளாய்ப் பணிபுரிந்து
வானந் தரிக்கும் வரம்பெற்றார் - மான

367. மடங்கலும் பார்ப்பதிக்கு வாகனமா யையற்
கிடங்கொளணைக் காலா யியைந்தே - தொடங்கரிய

368. எண்ணின்மிரு கக்குலமு மேத்து மரசுரிமை
மண்ணில் விரவி வயங்கிற்றே - கண்ணுதிறல்

369. வாசுகி யாதியுநம் மன்ன னடிபோற்றி
ஆசையுல கம்பரித்தின் பார்ந்தனவே - பேசியநின்

---

363. தன் பெருமை தானறியாத் தன்மையன் - இறைவன்.

364. முருகவேள், வண்டு வடிவங் கொண்டு உமாதேவியின் கூந்தலி லிருந்து இறைவன் உபதேசித்த வேதப்பொருள் முழுவதையும் அறிந்தன ரென்பர்; "எந்தாயின், கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே" (முத்துக். செங்கீரை. 10.)

365 - 6. அரியென்பது வண்டையன்றித் திருமால், சூரியன், இந்திரன் முதலியோரையும் உணர்த்தும். வலாரி - இந்திரன். பரசு - மழு. மானம் - பெருமை; மானமென்னும் குணமுமாம்.

367 - 8. உன் பெயராகிய அரியென்பதைத் தன் பெயராகப் பெற்ற சிங்கம் உமைக்கு வாகனமாதல் முதலான பயனை யடைந்து சிறப்பைப் பெற்றது; "வன்மா னுகைத்த கொடி" (தக்க. 76) என்பர். ஐயற்கு - இறைவனுக்கு. ஆதனத்தின் கால்கள் சிங்க வடிவமாகச் செய்யப்படும். மிருகராசனென்பது சிங்கத்தின் பெயர்களுளொன்று. கண்ணுதிறல் - கருதப்படும் வலியையுடைய.

369. வாசுகி - மகாநாகம்; ஆதி - அனந்தனென்னும் நாகம் முதலியவை. அரியென்று பாம்புக்கும் பெயருண்டு. ஆசை - திசைகள். திசையைப் பரிப்பவர் வாசுகி முதலியோர். உலகத்தைப் பரிப்பவன் ஆதிசேடன்.

370. மந்தியெனு நாம மரீஇயன்றே நீமருவும்
கொந்தவிழ்கா வானரங்கள் கொண்டவே - உந்துபெயர்ச்

371. சாகஞ் சிலீமுகஞ் சார்ந்தன்றே விற்கணையும்
வேகம் பகைக்கழித்து வீறுவதும் - நீகொள்

372. அளியென்னு நாம மணிந்த கருணை
களியெவர்க்கு மாற்றுவது காண்டி - ஒளிர்தருநின்

373. வண்டென்னு நாம மணிந்த வளைமகளிர்
தண்டளிர்க்கைச் சீரளிக்கும் தன்மைத்தே - வண்டேநின்

374. நாமமே யண்மினர்க்கு நன்மை தருமென்றால்
நாமிநீ நல்கல் வியப்பேயே - காமருநின்

## அளிக்கும் அவட்கும் அமைந்துள உரிமை

375. எங்கும் வழங்கு மியற்பெயர்த்தெங் கையணியும்
நுங்குலமெங் கூந்த னுழைந்துளரும் - எங்கெவர்க்கும்

376. கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை எங்கண்ணின்
வண்ண நினக்குரிய வண்ணமே - கண்ணலமங்

---

370. மந்தியென்று வண்டுக்கும் பெயர்; "குட்டிதழீஇ, ஊக்குதல் செய் யாத வுயர்மந்தி" (322) என்றார் முன்னும். மரீஇயன்றே - மருவி யல்லவா?

371. சாகம் - வண்டு, வில். சிலீமுகம் - வண்டு, அம்பு; 223 - ஆம் கண்ணியின் குறிப்பைப் பார்க்க.

373. வண்டென்று வளையலுக்கும் பெயர்; "காமருநின், எங்கும் வழங்கு மியற்பெயர்த்தெங் கையணியும்", "நல்லளியே, நின்னியற்பேர் கொண்ட நிரைவளைகள்" (374 - 5, 382 - 3.) வளை: எழுவாய்.

374. அண்மினர்க்கு - அடைந்தவர்க்கு. நாமி நீ - பெயரையுடையா யாகிய நீ. நல்கல் - நன்மையை அளித்தல்.

364 - 74. உன்னுடைய பெயராகிய அரி முதலியவற்றுக்கே இவ்வ ளவு பெருமை யிருக்கையில், அப்பெயர்களையுடைய உனக்குத் தண்ணளி செய்தல் வியப்பன்று; இயல்பென்றபடி.

374 - 5. நின் இயற்பெயர்த்து - உன்னுடைய இயற்பெயரையுடை யது. இயற்பெயர் வண்டென்பது. கையணி - வளை. எம்கையணி நின் இயற்பெயர்த்து.

376. "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை" (நான்மணி. 57); "கண் ணிற் சிறந்த வுறுப்பில்லை யாவதுங் காட்டியதே" (தஞ்சை. 4.) மகளிர்

377. தாடு தொழிலு நினதேயங் கோடரியும்
கூடியநின் ஞமமெனக் கூறுவதே - பாடகத்தாள்

378. எய்திய நூபுரங்க ளேங்க வவற்றுள்ளே
பெய்தது மந்தப் பெயருடைத்தே - ஐதுலகில்

379. மிக்குரிமை யிவ்வாறு வீறினேன் மிக்குணர்ந்த
தக்கவருஞ் சாற்றத் தகுமிஃதத் - தக்கவெனே

## மண்டுதுன்பகற்ற வண்டுரித் தென்றல்

380. வில்லிற் குணமாய் விசித்தேற்றி நுங்குலத்தை
வெல்லத் தொடுத்து மெலிவிக்கும் - வல்லமத

381. மார னுடற்ற வருந்தி யருங்கவலே
சாரவது நீபார்க்கத் தக்கதோ - வாரமென்ப

382. தல்ல லடையி னலர்விழிக்கு வாரிமைபோல்
மெல்லுடைக்குக் கைபோல் விரைவதன்றே - நல்லளியே

383. நின்னியற்பேர் கொண்ட நிரைவளேக ளென்கையில்
நின்னேயன்றி யாரே நிறுத்துவார் - அன்னேநின்

---

கண்களுக்கு வண்டு உவமமாகக் கூறப்படும்.

376 - 7. கண் அலமந்து - கண்கள் சுழன்று. ஓடு அரி - ஓடுகின்ற இரேகை. நின் நாமம் அரியென்பது. பாடகம் மகளிருடைய ஒருவகைக் காலணி.

378. நூபுரங்கள் - சிலம்புகள். உள்ளே பெய்தது பரல். அதற்கும் அரியென்ற பெயர் உண்டு.

379. உரிமை வீறினேன். அத்தக்க எனே - அங்ஙனம் உரிமையுள்ள என்னே.

380. குணமாய் - நாணுகி. நும் குலத்தை வில்லிற் குணமாய் விசித்தேற்றி யென்க. என்னே வெல்லவென ஒரு சொல் வருவிக்க.

381. வாரமென்பது - அன்பென்று சொல்லப்படுவது.

382. அலர்விழிக்கு இமை பாதுகாப்பென்பது, "மன்னன் மைந்தர்கள், கண்ணினேக் காக்கின்ற விமையிற் காத்தனர்" (கம்ப. வேள்வி. 41) என்பதிலும், உடைக்குக் கை பாதுகாப்பென்பது, "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே, இடுக்கண் களேவதா நட்பு" (குறள். 789) என்பதிலும் அமைந்துள்ளன.

383. இயற்பேர் வண்டென்பது. வளேயலுக்கும் வண்டென்று ஒரு பெயருண்டு ; 373, 391 - ஆம் கண்ணிகளேப் பார்க்க .அன்னே - ஐயோ.

384. றன்னுருவம் போலுந் தடங்கண் பொழிபுனனின்
றன்னையன்றி யாவர் தவிர்த்திடுவார் - மின்னனையார்

385. மேனி திதலை விழைவவெனப் பூத்தகணி
கானிவர் சண்பகமுங் காலுழக்காய் - ஆன

386. உரியைநீ யல்லாலெ னுள்ளிய மேனி
ரெிதிதலை யாரே நிறுப்பார் - விரிநீழல்

387. மாவிற் பலாசில் வளர்கூ விளத்தினறும்
பூவின் மதுவுண்ணப் புக்குலாய் - மேவுதொறும்

388. தன்னை வலம்புரிந்த தென்று தவமாக்கும்
மன்னனைநீ யண்ம மகிழ்வாயே - துன்னி

389. இரப்ப தரிதா விரப்பி னிரந்த
சுரப்பதின்மேற் றெல்லுலகிற் சீர்த்தி - நிரப்பதில்லை

390. அத்தகு சீர்த்தி யளிக்கலான் மேவாமை
பைத்த பெரும்பார் பகருமே - எத்திறத்தும்

391. வண்டங்கே செல்லின் மதுமலர்த்தார் மன்னவனுர்
வண்டிங்கே நல்க மதிப்பரே - மண்டி

---

383 - 4. கண்ணுக்கு வண்டு உவமை. (பி-ம்.) 'யாரே தவிர்க்கிற்பார்'

385. திதலை - தேமல்; அது பொன்னிற முடையது. விழைவ - ஒப்பன. கணி - வேங்கை மரம். மேனியும் திதலையும் ஒப்பன. கான் இவர் - வாசனைமிக்க. வேங்கைப்பூவும் சண்பகப்பூவும் பசலைக்கும் மேனிக்கும் முறையே உவமை. அவ்விரண்டு பூக்களிலும் வண்டுகள் செல்லா.

387. மா - மாமரம். பலாசு - புரசமரம். கூவிளம் - வில்வமரம். மா, பலாசு, கூவிளம் ஆகிய இவை முறையே ஏகாம்பரேசருக்கும், கச்சபேசருக்கும், கச்சிக்காரோணநாதருக்கும் நிழலளிப்பவை.

388. அண்ம - அடைய.

389. இரந்த - யாசித்த பொருள்களை. சுரப்பது - அன்புமிகுந்து அளித்தல்; " உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ் " (குறள், 232.) சீர்த்தி - மிகுபுகழ். நிரப்பது - பூர்த்தி செய்வது.

390. அளி - வண்டு, கருணை. கருணையாலேயே மிகுபுகழ் உண்டாகு மென்றபடி. பைத்த - விரிந்த. பார் - பூமியிலுள்ளவர்கள்.

391. இங்கே வண்டு நல்க - எனக்கு வளையலை அளித்தற்கு; இங்கு தன்மையை யுணர்த்திற்று.

392. முருகா ரளியங்கே முன்னிஞற் செம்மல்
பெருகா ரளிபெறுவ துண்டே - மருவுபொறி

393. வாளரி யங்கே மருவின் வெதும்பிவிழும்
நீளரிக் கண்ணீர் நிகழாதே - கோளில்

394. மதுகர மங்கே வழங்கினுயிர் வேவ
விதுகரம் வெப்புவிளை யாதே - கதுவலுறச்

395. சஞ்சரிக மங்கே தலைப்பட்டா லென்கரங்கள்
அஞ்சரி கங்கணங்க ளாருமே - விஞ்சலுறும்

396. சஞ்சா யகமங்குச் சார்ந்தாற் றிறன்மாரன்
வெஞ்சா யகமிங்கு மேவாதே - அஞ்சாச்

397. சுரும்படரி னங்கே சுரும்பிவர்வார் வில்லின்
பெருபம்படரி னங்கம்பீ ருதே - விரும்பி

398. ஒருமந்தி யங்கே யுறினழலிற் சீறி
வருமந்தி மாருதம்வாட் டாவே - பொருவில்

---

392. முருகு ஆர் - கள்ளை நுகர்கின்ற. செம்மல் பெருகு ஆர் அளி - தலைவருடைய பெருகிய பெறுதற்கரிய கருணையை.

393. வாள் அரி - ஒளியையுடைய வண்டு. துயரக்கண்ணீர் வெப்பமுள்ள தென்பதை, 251 - ஆம் கண்ணிக்குறிப்பாலுணர்க. கோள் இல் - குற்றமில்லாத.

394. மதுகரம் - வண்டு. வழங்கின் - சென்ருல். விது கரம் - சந்திர கிரணம் ; நிலா. உயிர்வேவ விதுகரம் வெப்பு விளையாதேென இயைக்க.

395. சஞ்சரிகம் - வண்டு. அம் சரி கங்கணங்கள் - அழகிய சரியும் கங்கணங்களும் ; சரி - ஒருவகை வளை.

396. சஞ்சயாகம் - வண்டு ; இப்பெயர் சஞ்சாளிக மென்று நிகண்டுகளிலுள்ளது. மாரன் வெம் சாயகம் - மன்மதனுடைய வெவ்விய அம்பு.

397. அங்கே சுரும்பு அடரின் ; சுரும்பு - வண்டு. சுரும்பு இவர் வார் - வண்டு பரவியிருக்கின்ற நாணையுடைய ; வார் - கயிறு ; இங்கே நாண். படரின் - வில்லாலுண்டாகிய துன்பத்தால்.

398. மந்தி - வண்டு ; கண்ணி, 370. அந்தி மாருதம் - அந்திக் காலமும் தென்றற்காற்றும். (பி - ம்.) ‘வாட்டாதே’ இப் பாடத்திற்கு அந்திக் காலத்தில் வரும் மாருதமென்க.

399. பிரமரங்க ணல்கிப் பெயரிஞ னந்தப்
பரமரங்க ணல்குபய னுண்டே - கரிசில்

400. வரிஞிமிறு செல்லின் மணிமுலைக்குச் சாந்திங்
குரிஞிமிறு கத்துற்ற தாமே - உரிய

401. அறுகாற் பறவை யடுப்பினிரண் டென்னப்
பெறுகாற் பறவைபிழை யாவென் - றுறுகாதல்

402. மல்க விரந்தேன் வறங்கூரா மேசேறல்
நல்குகட னென்று நயப்பாயே - நல்கி

## மங்கையர்பால் அருள் சங்கரற் குண்டெனல்

403. இலளிதைக்கு மூவரையு மீனவர மீந்தார்
பலருடலும் புக்கமரும் பண்டன் - உலையப்

404. புரியமர்மிக் காற்றிப் புகல்காம நல்கல்
திரிபுர சுந்தரிக்குச் செய்தார் - வரைமாதின்

---

399. பிரமரங்கள் - வண்டுகள். நல்கி - தண்ணளி செய்து, ஆனந்தப் மரமர் - ஆனந்த ருத்திரேசர். அங்கண் நல்குபயன்.

400 ஞிமிறு - வண்டு. சாந்து இங்கு உரிஞி - சந்தனக் குழம்பு என்பாற் பூசப்பெற்று. மிறுகத்துற்றது - கஸ்தூரி ; மிருகம் - மான் ; வடமொழி ஏழாமுயிராகிய ருவென்பதும், மெய்யாகிய ரகரமும் தமிழில் றகரமாக வருமென்பது, தக்கயாகப்பரணி உரையாசிரியர் கொள்கை. (பி-ம்.) ‘ மிறுகத்த துற்றதாமே ’

401. அறுகாற் பறவை - வண்டு ; ‘‘ அறுகாற் பறவை யளவில மொய்த்தலின்’’ (நற். 55 : 5.) இரண்டென்னப் பெறுகாற் பறவை - குயில், அன்றில் முதலியவை. இருகாற் பறவை என்னை வருத்தா என்றபடி.

402. வறம் கூராமே - வறுமை மிகாமல். சேறல் நல்கு கடன் - நாம் செல்லுதலே உதவி செய்யுங் கடப்பாடு ஆகும். நல்கி - தண்ணளி செய்து.

இனிப் பெண்பாலார்க்கு இறைவன் அருள் புரிந்தமை கூறப்படுகின்றது.

403. இலளிதைக்கு - லளிதாதேவிக்கு. மூவரையும் - பிரமன் முதலான மூன்று மூர்த்திகளையும். கா. திருவேகம்ப. 6 - ஆம் பாடல் முதலியவற்றைப் பார்க்க.

403 - 4. பண்டனென்னும் அசுரன் உலையும்படி. புகல்காமம் - விரும்பிய பொருளை. 462 - ஆம் கண்ணி முதலியவற்றையும், கா. தச்சிமயானப் படலத்தையும் பார்க்க.

405. பூங்கரத்துக் காப்புக் கடகம் புணர்த்தினுர்
ஆங்கவள்வீழ்ந் தேதழுவ வாக்கினுர் - பாங்கவடான்

406. மஞ்சணீ ராடவது வார்ந்தொழுக வக்கரையில்
மஞ்சணீர்க் கூத்தரென வைகினுர் - வஞ்சியவள்

407. நீக்கிய கோசமென நின்றகன்னி தன்னையுமில்
லாக்கிநகர் காவ லருளினுர் - மாக்கருங்கண்

408. மங்களே வேட்ட வரமளித்தார் காளிக்குப்
பொங்குகட ருக்கும் பொலிவளித்தார் - மங்கைசிறை

409. மீள விராமற்கு வீரமளித் தாரணங்காய்
ஆள விரேணுகைக்கன் பாக்கினுர் - நீளும்

410. சிறைகருடன் ருய்க்கொழிப்பச் செய்தார்சா பத்தின்
மிறைதிருமா துக்குமையால் வீத்தார் - மறையவனே

---

404 - 5. வரைமாதின் - உமாதேவியாருடைய. காப்புக் கடகம் - காப்பையும் கடகத்தையும். புணர்த்தினுர் - சேர்த்தார் ; கா. தழுவ. 132 - 3 - ஆம் கவிகளேப் பார்க்க. வீழ்ந்து - விரும்பி. அவள்தான் - உமா தேவியார்.

406. அது - அம்மஞ்சள் நீர். அக்கரையில் - மஞ்சள் நீர் நதிக்கரையில். மஞ்சள் நீர்க்கூத்தர் சித்தர்களாற் பூசிக்கப் பெற்றமையின் சித்தீசரெனவும் வழங்கப் பெற்றனர் ; கா. சித்தீச. 2 - 3.

407. கோசம் - சட்டை. கண்ணி - கௌசிகை. இல்லாக்கி - மனேவியாகச் செய்து ; கா. கண்ணீசப். 10-11 - ஆம் செய்யுட்களேயும், திருமண. 80 - ஆம் செய்யுளேயும் பார்க்க. காவல் - காஞ்சி நகரத்தைக் காத்துக் கொண்டிருத்தல். அவள் வழிபட்டதலம் கவுசிகேச்சர மெனப்படும் ; அதனேத் தொக்கீசமென்பர், **பழைய காஞ்சிப்புராண முடையார்.**

408. மங்களே-உமாதேவியாரின் பாங்கி. அவள் வழிபட்டதலம் மங்களீசமென்று கூறப்படும் ; கா. மாசாத்தன். 35 - ஆம் செய்யுளேப் பார்க்க. காளிக்குக் கடல்தாக்கும் பொலிவளித்த செய்தி 254 - 5 - ஆம் கண்ணிகளாலும், கா. கழுவாய். 418 - 21 - ஆம் செய்யுட்களாலும் அறியலாகும். மங்கை சிறை - சீதையின் சிறையை.

408 - 9. இராமனுக்கு வீரமளித்தனர் ; கா. வீர. இரேணுகை - இரேணுகாதேவி ; இரேணுகைக்கு அருள் செய்தமை : கா. இரேணு.

410. கருடன் தாய் - வினதை. அவளுக்குச் சிறையை யொழித்ததை, கா. முத்தீசப்படத்தாலுணர்க. சாபத்தின் மிறை - சாபத்தால் உண்டாகிய நடுக்கம். திருமாலின் சாபத்தை நீக்கியது, கா. வீராட்ட. 46 - ஆம்

411. டூடிய வாணி யுறவாக்கி ஞர்பெண்மை
கூடிய மாலைக் குறித்தணைந்தார் - நாடிய

412. மாண்டுகன்னு மாமுனியால் வானை யரம்பையர்கட்
கீண்டிய போக மியைவித்தார் - நீண்டவருள்

413. கண்டூ றுரையார்க்கே கைகொடுப்பா ரன்னவர்பாற்
பெண்டூது செல்லவெவர் பெட்கலார் - வண்டே

414. மிஞிறே யளியே விளரியரி யேநின்
மிஞிறுஞிமி றுக விளங்க - இமிழ்கின்ற

## களிக்கும் முகமன் அளிக்குக் கூறல்

415. வைசாகி வைகாசி வாய்ந்த பறையலகே
ஐதாம் பலகறையென் றுனவே - மைதீரும்

---

செய்யுளாலுணரப்படும். வித்தார் - நீக்கினர்- மறையவனோடு - பிரம தேவனோடு.

410 - 11. மறையவனோடு வாணியை உறவாக்கினர்; கா. ஆதீப். சிவாத் தானப். பெண்மை கூடிய மாலை - பெண் வடிவங் கொண்ட திருமாலை; என்றது மோகினியை : கா. மாசாத்தன்.

412. வான் ஐ அரம்பையர்க்கு - வானுலகிலுள்ள ஐந்து அரம்பையர் களுக்கு; கண்ணி, 71; கா. சகோதர. 2 - 6. (பி - ம்.) 'மாண்டுகன்னி'

412 - 3. கண்டு - தரிசித்து. கண்டு ஊறு உரையார்க்கே அருள் கொடுப்பார். எவர் பெட்கலார் - யார் விரும்பார்? தம்முடைய குறைகளை விண்ணப்பியாதவர்களுக்கே அவற்றைப் போக்கி அருள் செய்யும் ஆனந்த ருத்திரேசர் தூது வாயிலாகத் தம் குறையைத் தெரிவிப்பின் அருள் புரிவது நிச்சய மென்றுள்.

414. இதுமுதல் 421 - ஆம் கண்ணி வரையில் ஒரு தொடர்.

வண்டைப் புனைந்து கூறுகின்றவள் அதன் ஒரு பெயரிலுள்ள எழுத் துக்கள் நிலைமாறினமையாற் பிறபொருள்களின் பெயர்களிலுள்ள எழுத் துக்கள் முதலியனவும் அங்ஙனமே மாறின வென்கிறுள்.

விளரி - இரங்கற்பண்; "விளரியெடுத் தோது" (452) என்பர் பின். உன் பெயராகிய மிஞிறென்பதிலுள்ள எழுத்துக்கள் நிலைமாறி ஞிமிறென்று வந்தமையால் பிறபொருட் பெயர்களும் அங்ஙனமே மாறுதலுற்றன.

415. வைசாகி - விசாக நட்சத்திர சம்பந்தமுடையதாகிய இரண்டா வது மாதம். பறையலகு - சோழி; "பறையல கன்ன வெண்பற் பசுங்

416. நீர்க்கீழ் நகர்ப்புறங்கீழ் நீரே புறநகரே
சேர்க்குமின்முன் முன்றிலெனச் சேர்ந்தவே - பார்க்கண்

417. இருந்தா னிருந்தானே பார்க்க ணெழுந்து
திரிந்தான் றிரிந்தா னெழுந்தென் - றிருந்தனவே

418. தத்தந் திணைக்குரிமை சாற்றுகரு வும்பொழுதும்
ஒத்து முறழ்ந்து முறுவனவே - வைத்தபொருள்

419. வெண்பா முதனான்கும் வேதியர்முன் னோர்நால்வர்
ஒண்பாவென் றோத லுறழ்ந்தனவே - ஒண்பாத்

420. தளைமுதலுந் தம்மு ளுறழ்ந்தனவே காவி
ஒளிர்மதியொண் காம விதியே - வளரும்

---

கழற் குண்டு பைங்கண், உறுதுயர் நரகர்" (சீவக. 2773) என்பதும், 'பறையலகு இக்காலத்துப் பலகறையென மருவிற்று' என்னும் அதனுரையும் இங்கே அறியற்பாலன.

இவை எழுத்து மாறல்.

416. நீர்க்கீழென்பது கீழ்நீரெனவும், நகர்ப்புற மென்பது புற நகரெனவும், இல்முனென்பது முன்றிலெனவும் நிலைமாறின; "கீழ்நீர்ச் செவ்வரும்பு" (முருகு. 29.)

இவை சொல் மாறல்.

416 - 7. இவற்றிலுள்ள வாக்கியங்களிரண்டும் இலக்கண நூல்களின் உரைகளிற் காணப்படுகின்றன.

418. உறழ்ந்து - மாறுபட்டு. ஒரு திணைக்குரிய கருப்பொருளும் பொழுதும், ஏனைத்திணைக்கு முரியனவாய் மயங்கி வருதல், "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல். அகத்திணை. சூ. 19) என்பதனாலும் அதனுரைகளாலும் அறியலாகும்.

இவை பொருள் நிலைமாறல்.

பொருள் வைத்த வென மாறுக.

419. வெண்பா முதலிய நான்கும் அந்தணர் முதலிய நால்வர்க்கும் உரியவென்பர்: இதனை, "வெண்பா முதலாக வேதிய ராதியா", "வெண்பா முதலா நால்வகைப் பாவும், எஞ்சா நால்வகை வருணம் போல" (யா. வி. மேற்.) என்பவற்றால் அறியலாகும். உறழ்ந்தன - மாறி வந்தன.

419 - 20. ஒரு பாவிற்கே உரிய சீர்தளை முதலியனவும் வேறுபாக்களில் விரவி வந்துள்ளன வென்பது இங்கே அறியற்பாலது.

இவை யாப்பு நிலைமாறல்.

421. துடிகனியே தோமி றுகடினியே யான
படியேநீ யெத்தொழிலைப் பார்த்துப் - பிடிசெயினும்

422. அண்ண லருளு மதுவே நெறியாக
நண்ணுமதி போனலக்கு மாயினும் - மண்ணவர்க்குக்

423. கீழாக வைத்த கிளர்தொழில்சற் றும்புரியாய்
வீழாக மேற்றெருழிலு மேவாயே - வாழாகப்

424. பூவிலிருந் தூது முறைபுரித லேயன்றி
மேவு மரசுரிமை மேவாயே - தாவிலாச்

425. சந்திசைவ தல்லாற் றகுபயனுண் டாமேனும்
கொந்துபடு மத்தியிவர் கோளிலாய் - எந்திடத்தும்

---

420 - 21. காவிமதி யென்பன காமவிதி யென்றும், துடிகனி யென்பன துகடினி யென்றும் வந்தன; இவை அணியிலக்கணத்திலுள்ள ஒரு வகை நிரனிறை; ' காமவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய், தோமி றுகடினி சொல்லமிர்தம் '' (யா. வி. சூ. 95. மேற்.) (பி - ம்.) ' யானபடியெனினீ '

இவை அணியிலுள்ள நிலைமாறல்.

422. நலக்குமாயினும் - நன்மையைச் செய்யுமாயினும்.

421 - 2. வண்டே! நீ எத்தொழிலைக் கைப்பற்றினுலும் அண்ணலுடைய அருளும் அதுவாகவே நண்ணும்.

423. வீழாக - விருப்பமாக; வீழ் - விருப்பம். வாழாக - வாழுமிடமாக.

இனி வண்டை நோக்கிச் சமநிலையுடையா யென்கிருள்.

424. பூவில் இருந்தூது முறை புரிதல் - மலர்களிலிருந்து ஊதும் முறைமையைச் செய்தல்; பூமியின் கண்ணே யிருந்து தூது செல்லுமுறைமையைச் செய்த லென்பது மற்றெரு பொருள். அரசுரிமை - அரசாட்சி; அரச மரத்தினுரிமை யென்பது மற்றெரு பொருள். மேவாய் - விரும்பாய், அடையாய். அரசு பூவில்லா மரமாதலால், அதன்பால் வண்டு செல்லாதென்பது.

425. சந்து இசைவ தல்லால் - இருவரைச் சமாதானம் செய்வித்தற்கு உடன்படுவாயே யல்லாமல்; சந்தன மரத்தின் கண்ணே பொருந்துவதல்லாம லென்பது மற்றெரு பொருள். பயன் - பிரயோசனம், பால். கொந்து படும் அத்தி இவர் கோள் இலாய் - அங்குசத்தாற் கொத்தப்படும் யானையின் மேலேறும் கொள்கை யில்லாய்; காய்க் கொத்துக்கள் தோன்றும் அத்தி மரத்திலேறுங் கொள்கை யில்லா யென்பது மற்றெரு பொருள். அத்தி மரம் பூவில்லாததாகலின், வண்டு அதனிடம் செல்லாது. எந்திடத்தும் - எந்த

426. வாசந்தி யென்பாரை யன்றிநீ போதியென்பார்
பேசுந் திருவேதும் பேணிலாய் - ஆசில்

427. கரவீரங் கொண்டு கதழ்வாய்மற் ருங்கே
விரவாக் கணியோர்ந்து மேவாய் - பரவாம்பல்

428. அம்போ ருகத்தா ரமர்வா யுயர்வேனும்
வம்போடு கோளி மருவுகிலாய் - நம்பும்

429. குவலயநீ வேண்டிற் குறிக்குமுனந் தாட்கீழ்
அவலமற வாவதே யன்றோ - கவலையற

430. நாகம் புகுவாயந் நாகந் துறந்துரிய
சோகம் படர்வாய் துறையனைத்தும் - நீகண்டு

---

இடத்தும்; "பொய்குன்ற வேதிய ரோதிட முந்திடம்" (திருச்சிற். 223) என்பது போல வந்தது.

426. வா - வருவாய். சந்தி - சந்திப்பாய். என்பாரையன்றி - என்பவரைப் பேணுவாயே யல்லாமல். வாசந்தி - ஒருமரம். போதியென்பார் - போவென்று சொல்லுபவர்; போதி - அரசமரம். அரசமரத்தினிடம் வண்டு செல்லாதென்பது இங்கே அறியத் தக்கது.

424 - 6. வண்டு தூது சென்று காரியத்தை முடித்துக்கொண்டு வருதலில் ஆற்றலுடைய தென்பது இக்கண்ணிகளால் விளக்கப்பட்டது.

427. கரவீரம் கொண்டு - கை வீரத்தைக் கொண்டு; கரவீரம் - அலரிப்பூ. கணி - சோதிடன்; வேங்கைமரம். இதில் வண்டு செல்லாது.

427 - 8. ஆம்பல் அம்போருகத்தார் அமர்வாய் - யானையின் அழகிய போர் கெடும்படி முன் படையில் தங்குவாய்; ஆம்பல் தாமரை யென்பவற்றின் பூக்களில் அமர்வாய்; தார் - பூ; "தார்மாலை மார்ப" (யா. கா. மேற்.)

428. வம்போடு கோளி மருவுகிலாய் - வம்பும் கோளும் உடையவனை அடைவாய். வம்பு ஓடு கோளி - வாசனை ஒழிந்த ஆலமரம்: இது பூவாது காய்க்கும் மரமாதலின் இதில் வண்டு செல்லாது.

429. குவலயத்தை நீ விரும்பினல் அஃது உன் அடிக் கிழதாகும்; குவலயம் - பூமி, நீலோற்பலம்.

430. நாகம் - தேவலோகம், ஒருவகை மலர்மரம். துறந்துரிய சோகம் - துறவுற்று உரிமையுள்ள சோகமின்மையை; அசோக மரத்தி லென்பது மற்றொரு பொருள். உரிய: யகரம் தொகுத்தல். படர்தல் - நினைத்தல், செல்லல். துறை - அகப்பொருட்டுறை, நீர்த்துறை.

431. நீத்தவே யன்றோ நிகர்ப்பாரார் நின்னையினி
ஆத்தனுக்கு நின்போ லடுத்தாரார் - மூத்தபெரும்
432. தேவரு நின்னைச் சிரமேற்கொள் வாரென்னின்
யாவரே நின்னை யிகப்புறுவார் - போவதுசெய்

## சாற்றுறும் வண்டை ஆற்றுப் படுத்தல்

433. தங்கங்கே பல்பொழிலு மங்கங்கே பல்கயமும்
அங்கங் கமரர்கள்பூங் கோயிலும் - அங்கங்கே
434. விம்மிதப் போதுகளு மெய்த்தருவு முள்ளவற்றுள் [போய்த்
இம்மெனுங் காலமுஞ்சென் றெய்தாமைக் - கொம்மெனப்
435. தூதிதுவா லென்றுரிமை சூழ்ந்தவிட மாதுமுடி
மாது மறியா மரபெய்திச் - சோதிதிகழ்
436. ஆனந்த ருத்திரனு ரஞ்செழுத்து நெஞ்சாக்கி
ஊனந் தபும்பணிவு முள்ளாக்கிக் - கானம்
437. தழைத்தமலர்க் கொன்றைத் தனித்தா ரிவர்ந்து
மழைத்தமது வுண்டு மகிழ்ந்து - செழித்ததற்பின்

## இசைவகை பாடின் இரங்குவார் என்றல்

438. காந்தாரம் பாடு கனலிற் றழல்கின்ற
காந்தாரங் கொங்கை கலப்பிப்பார் - சேந்திடநாச்

---

431. ஆத்தன் = ஆப்தன் - இறைவன்; "ஆத்தியொடு மாத்தனைக் கண்டு" (திருப்பெருந்துறைப். கடவுள்.)

431 - 2. மூத்த பெருந்தேவர் - திருமால் முதலியோர். 'சிரமேற் கொள்வார்' என்றது, அவர்கள் தலைகளிலுள்ள மாலைகளில் வண்டு இருத்தல்பற்றி. போவது செய்து - போய்.

433. கயம் - ஆழமான நீர் நிலை.

434. விம்மிதம் - ஆச்சரியம்; விம்மித மென்பதைத் தருவிற்குங் கூட்டுக; கா. விம்மிதப் படலம் பார்க்க. இம்மெனுங் காலம் - அற்பகாலம்; "இம்மென்னு முன்னே" (காளமேக.) கொம்மென - விரைவாக.

435. உரிமை சூழ்ந்த - உரிமை கருதிய. இடமாதும் முடிமாதும் - உமையும் கங்கையும். 'இந்த வண்டு தூதாக வந்தது' என்று அவ்விருவரும் அறியாதபடி நீ எய்தி.

437. இவர்ந்து - ஏறி. மழைத்த - மிகத்துளித்த

இதுமுதற் பண்கள் சமற்காரமுறக் கூறப்படும்.

438. காந்தாரத்தைப்பாடு; காந்தாரம் - ஒருவகைப்பண். கன

439. சாதாரி யோது தமியே னிறையோடும்
சாதாரி யின்னே தவிர்த்தருள்வார் - மீதான

440. தாண்டகம் பாடு தமியேனை விட்டங்கே
தாண்டகங் கொண்டு தரவருவார் - ஈண்டும்

441. இராகங்கண் முற்று மியம்பிங் கிருவே
இராகங்க ளொற்றித் திணைவார் - பராவும்

442. கவுசிகம் பாடு கடிதடமே னில்லாக்
கவுசிக நிற்கும்வகை காண்பார் - இவறுசுவை

443. ஆர்நட்ட பாடை யறைதி யெனக்கிங்காம்
வார்நட்ட பாடை மருவியார் - பார்நட்ட

444. சீகா மரம்பாடு தேம்பு மெனையிணர்த்த
சீகா மரம்புரையச் செய்தருள்வார் - பாகாச்

445. சிகண்டிதனைப் பாடு தெரிவருமா னந்தச்
சிகண்டிதமை வேட்டதெனத் தேர்வார் - புகன்றவிசைக்

---

வின் - தீயைப் போல. காந்து ஆரம் - இப்போது சுடுகின்ற மூத்த மாலையை. நா சேந்திட - நாக்குச் சிவப்ப.

439. சாதாரி - ஒருபண்; இஃது இப்பொழுது தேவகாந்தாரியென வழங்கும். சாதாரி - இறக்கும் வழியை: தாரி - வழி. இன்னே - இப்போதே.

440. தாண்டகம் - ஒரு பண்; ஒருவகைச் செய்யுளுமாம். தாண்டு அகம் - தாண்டுகின்ற மனத்தை.

441. இருவேம் இரு ஆகங்கள் - இருவேமுடைய உடம்புகளிரண்டும்; "இருவேமுள் ளிருவே மிருந்திலேம்" (கம்ப. வாலி.) ஒற்றித்து - ஒன்று படச் செய்து; "ஒற்றிப்ப வைம்பூ வுறுத்தானை" (493) என்பர் பின்னும்; "ஒற்றிக்கு மாரனை யான்முனஞ் சேர வுழலுவரே" (பழமலையந்தாதி, 8.)

442. கவுசிகம் - ஒருபண், பட்டாடை. இவறு - விரும்புகின்ற.

443. நட்டபாடை - ஒருபண். வார் நட்ட - கயிறு கட்டிய. பாடை - இறந்தாரை எடுத்துச் செல்லுதற்குரிய ஒரு கருவி. மருவியார் - மருவுவியார்; அடையச் செய்யார்; இறவாமற் காப்பாரென்றபடி. பார் நட்ட - பூமி விரும்பிய.

444. சீகாமரம் - ஒருபண். இணர்த்த சீ கா மரம் புரைய - கொத்து விட்ட அழகையுடைய சோலையின்கணுள்ள மரத்தை யொப்ப. பாகு - தேம்பாகு.

445. சிகண்டி - ஒருபண்; அஃது ஆசானென்னும் பண்ணைச்

446. காம்போதி பாடுநெடுங் காம்போதி வில்லினர்
காம்போதிக் கென்னைக் கவல்வியார் - தேம்பாமை

447. நைவளம் பாடு நனிதேவ நாயகரென்
நைவளம் பார்த்து நலந்தருவார் - நைவில்

448. புறநீர்மை பாடு புகழ்தருமே கம்பர்
புறநீர்மை யென்பாற் புகுத்தார் - செறிநீர்மைப்

449. பஞ்சுரம் பாடு படர் கூர்ந்த வென்னுடற்குப்
பஞ்சுர மென்னும் பரிசுணர்வார் - எஞ்சலின்றிச்

450. செவ்வழி பாடு செறிந்திருக்கை யாங்குணர்ந்து
செவ்வழியே யாக்குந் திறநினைவார் - எவ்வழியும்

451. கொல்லி முழுதுங் குறித்தோ திதுவுமுயிர்
கொல்லியவட் கென்னக் குறிக்கொள்வார் - மெல்ல

452. விளரியெடுத் தோது விரவிரக்க மிக்கு
விளரியவென் மேனிவிழி யுய்ப்பார் - வளருமிசை

453. நேர்திறம் பாடொழியா நீரினளென் றேயருட்கண்
நேர்திற மல்லா நிலையருளார் - சீர்திகழப்

---

சார்ந்தது ; **சிலப். 13 : 110 - 12, அடியார்.** பார்க்க. இப்பண் சிகண்டிகை யெனவும் வழங்கும் ; "கால மருத வராளி **சிகண்டிகை**" **(பூதவேதாள.)** ஆனந்தச் சிகண்டி - ஆனந்த ருத்திரேசர். சிகண்டி - சிவபெருமான் ; மயிலின் தோகையை யணிந்தவ ரென்றுபொருள்.

446. காம்போதி - ஓர் இராகம். நெடு காம்பு ஓதி வில் - நெடிய மூங்கிலையுடைய மலையாகிய வில். காம்பு ஓதிக்கு - வேய்ங்குழலால் ஓதப்படும் இசைக்கு.

447. நைவளம் - ஒருபண், வருத்தமிகுதி ; வளம் - மிகுதி ; "வீணை வள நீறெழ நீறணி யம்பலவன்" **(திருச்சிற். 118.)**

448. புறநீர்மை - ஒருபண், வேறும் தன்மை.

449. பஞ்சுரம் - ஒருபண். பஞ்சு உரமென்னும் பரிசு - பஞ்சு வலியையுடைய தென்னும் தன்மையை.

450. செவ்வழி - ஒருபண், நல்லவழி.

451. கொல்லி - ஒருபண். இது உயிர் கொல்லி - இப்பண்ணனது உயிரைக் கொல்வது.

452. விளரி - இரங்கற்பண். விளரிய - வெளுத்த.

453. நேர்திறம் - ஒருபண் ; இது நோதிறமெனவும் வழங்கும்.

454. பாலை முழுதும் பயிறந் தவறுணர்ந்து
பாலை யுரிப்பொருளைப் பாற்றுவார் - சாலக்

455. குறிஞ்சி யனைத்துங் குழைந்துபல்கா லோது
குறிஞ்சி யுரிப்பொருளுட் கொள்வார் - உறுஞ்சுரும்பே

## வண்டின் ஐயம் கொண்டவள் கூறல்

456. எல்லா முரைத்தாங் கிசையெழுப்பிப் பாடுவல்யான்
நல்லா யவர்செழுந்தார் நல்குவார் - வல்லையான்

457. போய்வரினு மவ்வளவும் போற்றரிது நீயுயிரை
மாய்வதிடை போலும் வதிந்தாலும் - ஆய்மலர்த்தார்

458. தந்தளிப்ப தண்மித் தழுமளவு மாற்றுதற்கே
அந்தநலந் தாரி னமையாதே - எந்தவழி

459. மாதர் பிரியாமை வாழுமா னந்தேசர்
போதுவரென் றையுறவு பூணுதியேல் - ஓதுவல்கேள்

## உடையவன் செயலை விடையாப் புகறல்

460. ஈங்கிடையே யாவி யிறந்தாலு மாவடியில்
ஓங்கிய வைந்தொழில்செ யுத்தமனுர் - பாங்குபெறத்

---

நேர்திறம் அல்லா நிலை அருளார் - நேர்மையான திறத்தையே அருள்வார்.

454. பாலை முழுதும் பயில் - பாலைப் பண்கள் முழுவதையும் பாடுவாயாக; பாலைப் பண்கள் பலவாதலின், முழுது மென்றாள். தம் தவறு - தம்முடைய குற்றத்தை. பாலை உரிப்பொருள் - பிரிவு. பாற்றுவார் - நீக்குவார்.

455. குறிஞ்சி அனைத்தும் ஓது - குறிஞ்சிப் பண்ணின் திறங்களெல்லாவற்றையும் பாடு. குறிஞ்சி உரிப்பொருள் - கலத்தல்.

456 - 9. இவற்றில் வண்டின் கருத்து தலைவியாற் கொண்டு கூறப்படுகின்றது :—'யான் பாடுவேன்; அவர் மாலையை அளிப்பார்; யானும் விரைந்து கொண்டு வருவேன்; அதுவரையில் உயிரைப் பாதுகாத்துக் கொண்டு நீ இருத்தல் அரிது; இருந்தாலும் அவரைத் தழுவு மளவும் நீ ஆற்றி உயிருடனிருத்தற்கு அத்தார் அமையாது; இரண்டு மாதருட னிருக்குமவர் எங்ஙனம் வருவார்' என்று, வண்டே! நீ ஐயங்கொள்வாயாயின்.

460 - 61. தந்தாள் - தம்தாள், தந்து ஆள். இங்கே யான் இறந்தாலும் தம்முடைய திருவடிகளையே நிலைத்துத் தங்கிய எனக்கு உடலியக்கத்தையளித்து ஆனந்தருத்திரேசர் என்னை ஆண்டருள்வார்; இஃது உண்மையாகும். அந்தோ - ஐயோ.

461. தந்தாள் குறித்துத் தவிர்ந்தேற் குடலியக்கம்
தந்தாண் முறையவர்க்குச் சத்தியமே - அந்தோமுன்

462. மாயன்முத லோருடலை மாய்த்தெதிர்ந்த பண்டனுயிர்
சாய வழித்துத் தகமுன்போற் - காயம்

463. கொடுத்தருளுங் கச்சி மயானத்தெங் கூத்தர்
அடுத்த வினையுடலீ தாகி - விடுத்திடினும்

464. ஆக்கை யிதுபோ லளித்துப் பெருங்கருணை
வீக்க லவர்க்கு விளையாட்டே - போக்கில்

465. அமிர்தசஞ் சீவி யவிர்வெள்ளிக் கீந்து
துமியுடற திசியெனுந் தொல்லோற் - கிமிழ்கொளீஇ

466. வச்சிர யாக்கை வழங்குமிட்ட சித்தீசர்
மெச்சவுயிர் நல்கல் வியப்பேயோ - அச்சோ

467. இறவாத்தா னத்தி லிருந்தருளா னந்தர்
இறவாமை நல்கலெளி தன்றே - குறிமாவே

468. பெண்ணுருவி னீங்காப் பெருந்தகைமை யானந்த
அண்ண லியற்கை யறியாய்நீ - எண்ணில்

---

461 - 4. பண்டாசுரனைக் கொன்றது : மயானம் (57) என்பதைப் பார்க்க. வீக்கல் - பெருகச் செய்தல். போக்கு இல் - போக்குதலில்லாத.

465 - 6. துமியுடல் - துண்டாக்கிய உடம்பை. இமிழ்கொளீஇ - பொருத்தி. சுக்கிரனுக்கு அமிர்த சஞ்சீவினி மந்திரத்தையும் ததீசி முனிவர்க்கு வச்சிர சரீரத்தையும் அருளிச் செய்த இட்டசித்தீசர்க்கு எனக்கு உயிரை யளித்தல் இயல்பே ; கா. இட்டசித்தீச. அச்சோ - ஐயோ.

467. இறவாத்தானம் : இது காஞ்சியிலுள்ள தலங்களுள் ஒன்று ; தன்னை அடைந்தோர்க்கு இறவாமையை யளிப்பது. கா. இறவாத்தான. மாவே (வண்டே) குறிப்பாயாக.

468. பெண் உருவின் - உமாதேவியாருடைய வடிவத்தினின்றும். ஆனந்த அண்ணல் - ஆநந்த ருத்திரேசருடைய. எண்ணில் - எள்ளில். (பி - ம்.) 'பெண்ணுருவ நீங்கா'

469. நிறைந்தநெய்போ லெங்கு நிறைந்துலக மெல்லாம்
அறிந்துலக மேதுமறி யாதான் - செறிந்துயிர்க்கு

470. வெவ்வே றுடலம் விளைத்துத் திருமேனி
வெவ்வே றெடுக்கும் விரகினன் - எவ்வேறும்

471. ஆவானெவ் வோருருவே யாங்காங் குறக்காட்டி
மேவா மலத்தை விளித்திடுவான் - ஓவாது

472. வல்வி யொருபான் மகிழ்ந்திருக்க வேயன்றே
மெல்லியன்மான் மாதுநல மேவினன் - நல்லவெழில்

473. தாரு வனத்துத் தகுமடவார் தானையெலாம்
பாருக் களித்துப் படர்ந்திட்டான் - ஆர

474. அரவுமதி நீங்கா தமர்வனகா னுமை
இருமடவார்க் கின்பமியைக் கின்றான் - ஒருமதுரை

475. அங்கயற் கண்ணி யறியாமை மாதர்பலர்
செங்கைவளை யேற்றிநிறை சிந்தினன் - அங்கங்கே

476. மின்னனையார்க் கையன் விளைத்த திருக்கருணை
இன்னும் பலவா லெனக்கின்னே - தன்னறுந்தார்

477. தந்தருளி நீயிங்கே சாருமுன்னே தான்வரினும்
வந்திடுவேன் செய்கை மதிப்பாரார் - அந்தில்

---

468 - 9. "எண்ணிறைந்த நெய்யொத்து நின்றானை" (பு. வெ. கடவுள்.)

470 - 71. எ வேறும் ஆவான் - எந்த வேறுபாடு ஆவான்.

472. இது முதல், 476 - ஆம் கண்ணி வரையில் ஒரு தொடர்; பெண் பாலார்க்கு அருள்புரிந்தமை கூறுவாள்.

மால் மாது - திருமாலாகிய மாது; மோகினி; கா. மாசாத்தன்.

473. தாருவனத்துத் தகுமடவார் - தாருகாவனத்து முனிவருடைய பத்தினிமாருடைய. தானையெலாம் பாருக்கு அளித்து - ஆடைகளை யெல்லாம் பூமியில் வீழச் செய்து.

473 - 4. ஆர அரவு - ஆரமாகிய பாம்பு; "ஆரம் பாம்பு வாழ்வதாரூ ரொற்றியூரே லும்மதன்று" (தே. சுந்தர.); "ஆரத்தழையராப் பூண்டு" (திருச்சிற். 91.) இருமடவார் - உமையும் கங்கையும்.

475. திருவிளை. வளையல்விற்ற.

476. இன்னே - இப்பொழுதே. தார் - மாலை.

477. அந்தில் - அவ்விடம். (பி - ம்.) 'தான் வரலும்'

478. இருந்தருள்வா னுயிடினு மெம்பெருமா னுக்குத்
திருந்துதிரு மேனியெங்கு மன்றே - விரிந்தவுல

479. கெங்குந் திருவடிக ளெங்குந் திருக்கரங்கள்
எங்குங் கருணை யெழுமுகங்கள் - எங்கும்

480. மலர்ந்த விழிகளெங்கும் வார்செவிக ளெங்கும்
அலர்ந்தவரக் காம்பலன வாய்கள் - இலங்கு

481. மணிநாசி யெங்குமாய் மன்னி யிருப்பன்
பிணியா வருக்கும் பெயர்ப்பான் - பிணியேதும்

482. இல்லா னுருதே யுறுவா னிறைஞ்சுநர்பாற்
செல்லாமே செல்வான் செறிவரங்கள் - எல்லாம்

483. கொடாதே யெவர்க்குங் கொடுப்பா னுருவம்
மடாதே விழிக்கண் மடுப்பான் - விடாதுரைகள்

484. கேளாதே கேட்பான் கிளவாதே தான்கிளப்பான்
மூளாதி மோவாதே மோக்கிற்பான் - வாளாங்

485. குழல்வார் தமையு முறப்பிணிப்பான் விட்டுக்
கழல்வாரை யுங்கழல வொட்டான் - தொழிலனைத்தும்

486. செய்யாதே செய்குவான் செய்தொழிற்குத் தக்கபயன்
னையா ருயிர்நுகர நாட்டுவான் - எய்யாமை

487. ஆருயிர்கள் பேரின்ப வாழி படிநெறியிற்
சாரும் விரகன்றித் தானினையான் - ஓரும்

---

480. எங்கும் செவி : "எங்குஞ் செவியுடையாய் கேளாயோ வென்னுரையே" (திருவிளை. பரிநரி.) அரக்காம்பல் - செவ்வாம்பல்.

481. யாவருக்கும் பிணியைப் பெயர்ப்பானென்க ; பிணி - பந்தம் ; "பிணிநீர் மலம்பெயர்க்கும் பெம்மான்" (காப்பு.)

483. (பி - ம்.) 'கொடாமே' 'மடாமே'

484. கேளாதே கேட்பான் : "கேளாதே யெல்லாங் கேட்டான்" (திருவா. திருச்சதகம், 28.) வாளாங்கு - சும்மா ; "வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே" (தே. சுந்தர.)

486. நை ஆர் உயிர் நுகர - நைகின்ற அரிய உயிர்கள் அனுபவிக்கும்படி. எய்யாமை - உயிர்கள் இளையாதபடி ; அறியாதபடி யென்றுமாம். (பி - ம்.) 'செய்யாமே செய்வான் செயுந்தொழிற்கு'

487. ஓரும் : அசைநிலை.

488. தனைநோக்கு மாருயிரைத் தானோக்கி மூல
மனைநோக் கறத்தன்பால் வைப்பான் - வினைசாம்ப

489. எவ்வளவுந் தன்பா விசையக் கருதுவார்
அவ்வளவுந் தம்பா விசைந்தணைவான் - எவ்வெவர்தம்

490. கண்ணுக்குங் காணுன் கருத்துக்குஞ் சேய்மையான்
வண்ண வுரைக்கும் வளவாதான் - திண்ணிய

491. வாண னறைகூவ வாகுபல வுந்துணித்தான்
ஓணன் பொரக்கருணை யூக்கினுன் - பூணும்

492. சலந்தரனைத் தேய்த்தான் சமர்த்த விராமற்
கலங்கு பரசொன் றளித்தான் - இலங்குமையோ

493. டொற்றிப்ப வைம்பூ வுறுத்தானை நீற்றினுன்
பொற்றவருள் கல்லெறிக்குப் பூண்பித்தான் - முற்றிழையாள்

494. வாட்கண் புதைப்ப மருங்கொழித்தான் மெய்குழையத்
தோட்கொண் டணையநலஞ் சூழ்ந்தணைந்தான்-தாட்பணிய

---

488. மூலமனை - ஆணவமலமாகிய இடம். சாம்ப - கெட.

489. (பி - ம்.) 'எவ்வளவுதன்'

490. வளவாதான் - கலவாதான்.

(பி - ம்.) 'வளவாதான் - தண்ணருளாற்', 'கண்ணுக்குங் காண்பான் கருத்துக்கு மண்மையான், வண்ணவுரைக்கும் வளைப்புண்பான் - திண்ணிய வாணன்'

491. வாணன் அறை கூவ - வாணுசுரன் போர்செய்தற்கு அழைக்க. வாகு பலவும் - தோள்கள் பலவற்றையும்; வாணீசம் (68) என்பதன் குறிப்பைப் பார்க்க. ஓணன் - திருமால்; திருமாலுக்குரிய நாள் ஓணமாதலின் அவர் ஓணனெனப்பட்டார்; "மாயோன் மேயவோண நன்னுள்" (மதுரை. 591); "ஓணத் தானுல காளுமென் பார்களே" (திவ்.)

492. சலந்தரன் - ஓரசுரன். அவனைத் தேய்த்தது: சலந்தரேசம் (68) என்பதன் குறிப்பைக் காண்க. சமர்த்த - போர் செய்த. இராமற்கு - பரசுராமனுக்கு. பரசு - மழுவென்னும் ஆயுதத்தை. பரசுராமேச்சுரம் (91) என்பதன் குறிப்பைப் பார்க்க.

493. ஒற்றிப்ப - ஒன்றுபடச் செய்யும் பொருட்டு; 441. ஐம்பூ உறுத்தானை - ஐந்து மலர்களாகிய பாணங்களை ஏவிய மன்மதனை. நீற்றினுன் - சாம்பராகச் செய்தான். கல் எறி - சாக்கிய நாயனு ரெறிந்த கல்லின் எறி.

493-4. அம்பிகை கண்புதைத்ததும் காஞ்சியில் இறைவனுடைய மெய்யை அவர் குழைத்ததும், கா. தழுவக்குழைந்த படலத்தால் அறியலாகும். தாள் பணிய - தம்முடைய திருவடியை வணங்கும்படி.

495. ஏவிய செவ்வேட் கினிததுசெய் தானவன்றன்
ஏவலொழி யக்கழுவா யேலென்ருன் - பூவினுக்கு

496. மாயனொரு கண்ணளிப்ப வாங்கினன் வன்ருெண்டற்
கேயவொளி கண்ணென் றினிதளித்தான் - தூய

497. மறைக்கோ வணத்தான் மறைச்சிலம்பான் மாவான்
மறைக்கோ வறிவரிய மாண்பான் - நெறிக்கோள்

498. உயிருக் குயிரா னுயிரறிவுக் கெட்டான்
பயிலுயிர்க்கே யின்பருளும் பண்பான் - பயிலுநர்க்குக்

499. கண்ணுமா னந்தங் கனிவாயு மானந்தம்
வண்ண வதனமு மானந்தம் - தண்ணறல்சேர்

500. வேணியுமா னந்தம் வியன்மார்பு மானந்தம்
பூணுமா னந்தம் புயங்கரந்தாம் - நாணுடையும்

501. ஆனந்த மானந்த மானந்த மானந்தம்
ஆனந்த மெவ்வுறுப்பு மானந்தம் - ஆனந்தன்

---

495. செவ்வேட்கு - முருகக் கடவுளுக்கு. அது - அப்பணிவை. அவன் தன் ஏவல் ஒழிய - அம்முருகக் கடவுள் தன்னுடைய கட்டளையை மறுக்க; இஃதாவது பிரமனைச் சிறையினின்றும் நீக்குக வென்றது. கழுவாய் - பிராயச்சித்தம். ஏல் - ஏற்றுக்கொள்.

494 - 5. கண்ணி, 314, பார்க்க.

496. மாயன் ஒரு கண்ணளிப்ப வாங்கியது திருமாற்பேற்றில்; கா. திருமாற். 9 - 10, பார்க்க. வன்ருெண்டன் - சுந்தரமூர்த்தி நாயனர். ஒளி ஏய - ஒளி பொருந்த. ஏகாம்பரேசர் சுந்தரமூர்த்தி நாயனருக்கு இடக் கண்ணை அளித்தனர்; "கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன் பெற்றவாறே" (தே. சுந்தர.); "மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார்" (பெரிய. ஏயர்கோன். 287.)

497. மறை யென்பதை மாவென்பதனேடும் கூட்டுக. மா - மாமரம். மறைக்கோ அறிவரிய - பிரமதேவன் அறிதற்கரிய; வேதங்களுக்கும் அறி தற்கரிய வெனலுமாம்.

498. பயிலுநர்க்கு - தம்மை இடைவிடாமல் தியானிப்பவர்களுக்கு.

499. அறல் - கங்கை நீர்.

500. பூண் - ஆபரணம். புயமும் கரமும் நாணும் உடையும்.

502. காஞ்சியுமா னந்தமாய்க் காணநிற்பா னத்தகைய
வாஞ்சையுறு மானந்த வள்ளறன் - காஞ்சனத்த

503. கோயிலை முற்றிக் குறுகி முறைமையால்
நீயணவி யான்சொ னெறியுளிநின் - றுயிடையே

504. பூங்கொன்றை வாங்கியிங்குப் பொற்பக் கொணர்ந்தென்றும்
ஓங்குபெரு வாழ்க்கை யுதவு.

கச்சி ஆனந்த ருத்திரேசர்

வண்டுவிடு தூது

முற்றிற்று.

---

502. வாஞ்சை - விருப்பம். வள்ளலென்றது திருவருள் பாலிப்பா ரென்பதைப் புலப்படுத்துகின்றது. காஞ்சனம் - பொன். (பி - ம்.) 'அத்த கையின்'

503. முற்றி - வலம்வந்து. அணவி - அடைந்து. நெறியுளி - விதிப் படியே.

504. கொன்றை: சிவபெருமானுக்கு அடையாளப்பூ. பொற்பக் கொணர்ந்து - அழகு பெறக் கொண்டு வந்து. உதவு - தருவாயாக.

## கச்சியப்ப முனிவர் நெஞ்சு விடுதூது

(இந்நூல் கச்சியப்ப முனிவர் மாணுக்கருள் ஒருவரால் இயற்றப் பெற்றதாகத் தெரிகிறது. இங்கே அதிலிருந்து சில கண்ணிகள் காட்டப்படுகின்றன.)

தீதகற்றுங் காஞ்சித் திருப்புரா ணஞ்சிறப்பின்
ஓதிமுடித் தேற்று முயர்புகழோன் — மீதாகக்

கொண்டு பொழிகவிதை கொண்டாட வற்புதமாய்
மிண்டு பெரும்புலமை மேவிடுவோன் — பொன்ருத்

தணிகைவரை வேலர் தருமருள்கொண் டின்பால்
தணிகையாற் றுப்படை சாற்றும் - தணிகைப்

பதிற்றுப்பத் தந்தாதி பல்பிரபந் தங்கள்
துதித்துறையும் போதருளே தூண்ட — மதித்தாரும்

ஆர்வத் தடியா ரருகணேந்தின் போங்குறவிச்
சீர்வைத் தொளிருந் திருத்தணிகைக் — கோர்வைத்த

சீரார் புராணஞ் சிறந்ததமி ழிற்செய்திங்
கேராகத் தந்தருளா யென்றிரப்பச் — சீராரும்

வேலரரு ளன்பின் விரகீ தெனமகிழ்ந்தங்
கேலுறுமுன் னூலி னியல்புணர்ந்து — கோலம்

சிறந்ததணி கைக்கோர் திகழ்ந்தபுரா ணஞ்சீர்
பிறங்கவுரைத் தீந்தருளும் பெம்மான் — சிறந்தோங்கும்

பேரூர் திருவானைக் காப்பிறங்கும் பூவாளூர்க்
கேராம் புராண மிருந்தமிழின் — சீராகக்

கொண்டுதுதித் தோதிக் குலவும் பெருஞ்சீர்த்தி
மிண்டிடப்பா ரெங்கும் விளங்கிடுவோன் — ஒண்கச்சி

ஆனந்த ருத்திரருக் கன்பாய்க் கழிநெடிலும்
தேனுந்து வண்டுவிடு தீந்தூதும் — மானப்

பதிற்றுப்பத் தந்தாதி பார்புகழ வோதித்
துதித்துமகிழ் வித்தொளிருந் தொல்லோன் — கதித்ததிருத்

தொண்டைவள நன்னாட்டுஞ் சீர்ச்சேரன் சோழனுடன்
எண்டருநற் பாண்டி யெழினாட்டும் — மண்டியொளிர்

ஏராந் தலங்கட் கெழிற்பிரபந் தங்கள்பல
சீரா யுரைத்துச் சிறப்பித்தோன் — ஏரார்நற்

சங்கத் தமிழுந் தளர்ந்து புறங்கொடுப்பப்
பொங்குதமிழ் செய்சீர்ப் புலவர்பிரான் — அங்கையினால்

ஆர்கலியை யுண்டோ னருளுந் தமிழ் விளங்கப்
பாரிற் பெருந்தமிழைப் பாலித்தோன் — சீர்மதுரம்

சித்திரம்வித் தாரமெலாஞ் செய்பணியென் னென்றிரப்பச்
சித்தமகி ழப்பணி செய்விப்போன்.

---

**ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பரிபூரண மடைந்தகாலம்.**

ஏர்தரு சாலி வாகன சகாத்த மாயிரத் தெழுசதத் தொருபத்
திரண்டின்மேற் சாதா ரணவரு டத்தோ டியைதரு சித்திரைத் திங்கள்
சார்தரு தெய்தி பத்தினு ரென்று தகுஞ்செவாய் வாரம்பூர் வத்துச்
சத்தமி புனர்பூ சத்திரு நாளிற் சார்தரு கும்பலக் கினத்திற்
சீர்தரு துறைசை நமச்சிவா யன்றன் திருப்புக ழுலகினிற் றுலக்கித்
திகழ்ந்துள கச்சி யப்பதே சிகனற் றிருப்பெருங் காஞ்சியி னெய்திச்
சேர்தரு மடியார் தமக்கக விருளைத் தினகரன் முன்னிரு ளென்னத்
திருந்துதன் னருளா லகற்றிவீ டுறுத்திச் சிறந்தபூ ரணத்தடைந் தனனே.

வருடஞ்சா தாரணமா மன்னுதிங்கண் மேடம்
திருநாட் புனர்பூசஞ் சேர்ந்தார் — கருளாற்
கருவே றறுத்தருளெங் கச்சியப்ப தேவன்
திருமேனி நீங்குந் தினம்.

இவ்விரண்டு செய்யுட்களும் ஸ்ரீமான் ராவ் சாகிப் மு. ராகவையங்காரவர்களுடைய பெருந்தொகையில் உள்ளவை.

---

## தலப்பெயர் முதலியவற்றின் அகராதி

[எண் - கண்ணியைக் குறிப்பது]

## இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அடியார் - அடியார்க்கு நல்லாருரை
அம்பலவாண. கலம் - அம்பலவாணதேசிகர் கலம்பகம்
ஆனந்த. பதிற் - ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி
ஏ. உலா - ஏகாம்பர நாதருலா
கந்த - கந்தபுராணம்
கம்ப - கம்பராமாயணம்
கலி - கலித்தொகை
கா - காஞ்சிப்புராண[ம்]
கா. கலித் - காஞ்சிக் கலித்துறைப் புராணம்
காசிக் - காசிக்கலம்பகம்
காப் - காப்புச் செய்யுள்
காளமேக - காளமேகப் புலவர் பாடல்
குறுந் - குறுந்தொகை
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ. போ - சிவஞான போதம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவகசிந்தாமணி
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனர்
சூ - சூத்திரம்
தக்க - தக்கயாகப்பரணி
தஞ்சை - தஞ்சைவாணன் கோவை
தண்டி - தண்டியலங்காரம்
தணிகைப்பதிற் - திருத்தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதி
தமிழ்விடு - தமிழ்விடுதூது
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்
திருநா - திருநாவுக்கரசு நாயனர்
திருப்பெருந்துறைப் - திருப்பெருந் துறைப் புராணம்
திருவா - திருவாசகம்
திருவானைக்காப் - திருவானைக்காப் புராணம்
திருவிளை - திருவிளையாடற்புராணம்
திவ் - திவ்வியப் பிரபந்தம்
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியருரை
நள - நளவெண்பா
நாகைக் - திருநாகைக் காரோணப் புராணம்
நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக் கடிகை
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்
நைட - நைடதம்
ப. கா - பழைய காஞ்சிப்புராணம்
பு. வெ - புறப்பொருள் வெண்பா மாலை
புறநா - புறநானூறு
பூதவேதாள - பூதவேதாளவகுப்பு
பூவாளூர்ப் - பூவாளூர்ப் புராணம்
பெரிய - பெரியபுராணம்.
பெருங் - பெருங்கதை
பேர் - பேராசிரியருரை
மதுரை - மதுரைக்காஞ்சி
மயிலையந் - திருமயிலைத்திரிபந்தாதி
மறைசை - மறைசையந்தாதி
முத்துக் - முத்துக்குமாரசாமி பிள் ளைத் தமிழ்
முருகு - திருமுருகாற்றுப்படை
மேற் - மேற்கோள்
யா. கா - யாப்பருங்கலக்காரிகை
யா. வி - யாப்பருங்கலவிருத்தி
வி. பா - வில்லிப்புத்தூராழ்வார் பாரதம்

---

Printed at KABEER PRINTING WORKS, Triplicane, Madras MS 524
and Published by S. Kalyanasundara Iyer, P. I. C. No. Ms. 376-1000 copies